# விளையாட்டுக்களில் விநோதங்கள்

எஸ். நவராஜ் செல்லையா. M.A.D.P.E

# விளையாட்டுக்களில் விநோதங்கள்

மூன்று முறை தேசிய விருது பெற்ற நூலாசிரியர்

**டாக்டர் எஸ். நவராஜ் செல்லையா**

M.A., M.P.Ed., Ph.D., D.Litt. D.Ed., FUWAI,

ராஜ்மோகன் பதிப்பகம்

8, போலீஸ் குவாட்டர்ஸ் ரோடு,
தி. நகர், சென்னை-600 017.

# பதிப்புரை

திரு. எஸ். நவராஜ் செல்லையா அவர்கள் சிறந்த கவிஞர். சிந்தனையூட்டும் நாடக ஆசிரியர். நடிகர். இயக்குநர். அத்துடன், புகழ்மிக்க விளையாட்டு வீரரும் ஆவார்.

அண்ணாமலை பல்கலைக் கழகம், சென்னைப் பல்கலைக் கழகம், மற்றும் தமிழகமெங்கும் நடைபெற்ற விளையாட்டுப் பந்தயங்களிலும், விளையாட்டுப் போட்டிகளிலும் பங்கு பெற்று வெற்றி வீரராகத் திகழ்ந்தவர்.

D. P. E. எனும் சென்னை பல்கலைக் கழகத் தேர்விலே, சென்னை மாநிலத்திலேயே முதலாவதாக முதல் நிலையில் (Distinction with First Rank) தேறி வெற்றி பெற்றவ ராவார்.

கற்பனை செறிந்த கவிதைகளாக, சுவைமிகு சொல்லோவியங்களாக, கருத்தாழ மிக்கக் கட்டுரைகளாக, கற்பாரைக் கவர்கின்ற கதைகளாக, விளையாட்டு நிகழ்ச்சிகளைப் படைத்து, வானொலி, டெலிவிஷன், வாரமாத்திர இதழ்கள், நூல்கள் மூலமாக விளையாட்டுத் துறைக்கு இவர் செய்யும் பணியை, தமிழ் கூறும் நல்லுலகமே புகழ்ந்து போற்றுகிறது.

விளையாட்டுப் பந்தயங்களில் பயிற்சி பெறுபவராக, தருபவராக, நடத்துனராக, பார்வையாளராகப் பெற்ற அனுபவங்களை தமது தமிழிலக்கியப் புலமையுடன், தனித் தமிழ் இலக்கிய நூல்களாக விளையாட்டுத் துறை நூல்களைப் படைக்கும் திறமைக்கு இவரது நூல்களே சான்றாகும்.

1977ம் ஆண்டுக்கான ஏழாவது தேசிய விளையாட்டுத் துறை இலக்கிய நூல்கள் போட்டியில், ஒலிம்பிக் பந்தயத்தின் கதை என்னும் நூலுக்கு, முதன்முதலாகத் தேசிய விருது பெறும் தமிழ் எழுத்தாளர் எனும் பெருமையை திரு. எஸ். நவராஜ் செல்லையா அவர்கள் பெற்றிருக்கிறார்கள்.

இந்நூல் மூன்றாவது பதிப்பாக வெளிவருகிறது. ஆதரவு தந்து எங்களது முயற்சிக்குப் பெருந்துணையாக இருக்கின்ற அனைவருக்கும் எங்களது நன்றி கலந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

பதிப்பகத்தார்

# முன்னுரை

விளையாட்டுத்துறை தமிழ் இலக்கிய நூல் வரிசையில் இந்நூல் எனது 12வது நூலாக உங்கள் கையில் தவழ்கிறது.

இதயத்தில் இன்பத்தை விளைக்கின்ற நிலமாக, உணர்ச்சிகளில் உற்சாகத்தை ஊட்டுகின்ற களமாக, வாழ்க்கையில் வானமுத விருந்தளிக்கும் தலமாக விளையாட்டுக்கள் விளங்கி வருகின்றன.

விருந்தளிக்கும் விளையாட்டுக்கள், சில நேரங்களில் மனிதருக்கு விநோதங்களை அளித்து வேடிக்கைக் காட்டியிருக்கின்றன.

வெறியைக் கிளப்பி வீறிடச் செய்திருக்கின்றன. கொடுமைகளை உயர்த்திக் கொடிகட்டிப் பறக்கவிட்டிருக்கின்றன.

அமைதியையும் ஆனந்தத்தையும், அதே நேரத்தில் அருவெறுக்கத்தக்க நிகழ்ச்சிகளையும் பற்றிய விளையாட்டுக் குறிப்புக்களை குறிகாட்டிச் சென்றிருக்கின்றன சரித்திர நிகழ்ச்சிகள்.

சரித்திர நிகழ்ச்சிகளின் சாரத்தைப் பிழிந்து, தமிழ்த் தேன் கலந்து, இலக்கிய நயம் மிளிர, இதமான கட்டுரைகளாக எழுதிய என் முயற்சியைத் தினமணி ஆசிரியர் அன்பு கூர்ந்து சுடர் இதழில் வாராவாரம் வெளியிட்டு என்னை இன்புற ஊக்குவித்தார்கள்.

அமரர் ஜாம்பவான் அவர்களின் அன்பும் ஆதரவும் என் முயற்சிக்குப் பெரிதும் பக்கபலமாக இருந்து உதவின.

இந்த நேரத்தில் அவர்களது அன்பையும் ஆதரவையும் நன்றியுடன் நினைத்து மகிழ்கிறேன்.

உற்ற நேரத்தில் அறிவுரை தந்தும், உறுபொருள் கொடுத்தும். உற்சாகப்படுத்தியும் வருகின்ற என் அன்புமிகு ஆசிரியர் டாக்டர் ராப்சன் அவர்களுக்கு என் உளங்கனிந்த நன்றி,

எல்லாவகையிலும் எனக்கு உற்றத் துணையாக இருந்து உதவுகின்ற R. சாக்ரட்டீசுக்கு என் நன்றி.

என் அரிய முயற்சியை ஆதரித்துவரும் அன்பர்கள் அனைவருக்கும் இந்த நூலை அளித்து, அன்புக்கும் ஆதரவுக்கும் என் இதயங்கனிந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

வணக்கம்

ஞானமலர் இல்லம்<br>சென்னை—17

எஸ். நவராஜ் செல்லையா

# காணிக்கை

என் தந்தையார்

அமரர் **M. சாமிகண்ணு**

அவர்களின்

திருமலர் திருவடிகளில்

இந்நூலைப் படைக்கின்றேன்.

# வளமான வாழ்வுக்கு வழிகாட்டும் ஆசிரியரின் அருமையான நூல்கள்

விளையாட்டுக்களின் விதிகள்
விளையாட்டுக்களின் கதைகள்
விளையாட்டு விழா நடத்துவது எப்படி ?
விளையாட்டுக்களில் விகுடி விஞு விடை
விளையாட்டு விருந்து
கால் பந்தாட்டம்
கைப் பந்தாட்டம்
கூடைப் பந்தாட்டம்
வளைகோல் பந்தாட்டம்
கேரம் விளையாடுவது எப்படி ?
சதுரங்கம் விளையாடுவது எப்படி?
ஒலிம்பிக் பந்தயத்தின் கதை
(தேசிய விருதுபெற்ற நூல்)
நீங்களும் ஒலிம்பிக் வீரராகலாம்
நீங்களும் உடலழகு பெறலாம்
நீங்களும் உயரமாக வளரலாம்
பெண்களும் பேரழகு பெறலாம்
எதற்காக உடற்பயிற்சி செய்கிறோம் ?
தொந்தியைக் குறைக்க சுலபமான வழிகள்
கூடி விளையாடும் குழு விளையாட்டுக்கள்
பயன் தரும் யோகாசனப் பயிற்சிகள்
பாதுகாப்புக் கல்வி
உடலழகு பயிற்சி முறைகள்
செங்கரும்பு
நல்ல நாடகங்கள்
நல்ல கதைகள் I
நல்ல கதைகள் II
நல்ல கதைகள் III

# 1. பந்து பிறந்த கதை

''மாட்சிமை தங்கிய மகாராஜா அவர்கள் மாபெரும் கால்பந்தாட்டப் போட்டி ஒன்றின் இறுதியாட்ட விழாவிற்குத் தலைமை தாங்கிப் பரிசுகள் வழங்க இசைந்துவிட்டார்'' என்ற செய்தி, விளையாட்டு ரசிகப் பெருமக்களை ஆனந்தக் கடலில் ஆழ்த்தி விட்டது. கடல்போல மக்கள் வெள்ளம் அன்றைய ஆட்டத்தைக் காண வந்து குழுமியிருந்தது.

வேடிக்கை பார்க்கும் மக்களுக்கே இத்தனை வேகமும் வெறியும் இருந்தது என்றால், விளையாடும் வீரர்களுக்கு உவப்பும் உற்சாகமும் எப்படி இருந்திருக்க வேண்டும்! அவர்களது உணர்ச்சிமிக்க உற்சாகத்தின் உச்சக் கட்ட விளையாட்டில், பந்து அவர்களது காலில் படாதபாடுபட்டுப் பறந்தது. மக்களுக்கோ மகிழ்ச்சிப்பெருக்கு, மன்னருக்கோ மாபெரும் கவலை. பந்தை உதைக்கப் பாய்ந்தோடி பலர் மோதிக் கொள்ளும்பொழுதெல்லாம், மன்னர் வேதனையால் துடித்தார், துவண்டார், துள்ளி எழுந்தார்.

போட்டி முடிந்துவிட்டது. பரிசளிப்பதற்கு முன்னர், பரந்த அந்தத் திடலில், சிறந்த முறையில் விளையாடிய வீரர்களை பாராட்டிப் பேச மன்னர் எழுந்தார், பொது மக்களும் வீரர்களும் பரபரப்புடன் மன்னரது முகத்தையே ஆவலுடன் பார்த்த வண்ணமிருந்தனர். மன்னருக்கோ தம் மாருத மனக்குறையினை வாய்விட்டே கூறிவிட வேண்டும் என்ற உணர்வு... சொற்பொழிவைத் தொடங்கியும் விட்டார்.

''நம்முடைய நாட்டில் இப்படி ஓர் ஏழ்மை நிலை இருக்கிறது என்று இதுவரையிலும் எமக்குத் தெரியாமற் போனது பெருங்குறையே. அதற்காக மிகவும் வருந்துகிறோம். இவ்வளவு ஆர்வமுடைய வீரர்கள் நம நாட்டில் இத்தனை பேர்களா இருககிறார்கள் ? இத்தனை பேர்களுக்கும் ஒரே ஒரு பந்துதானா ? இந்தப் பந்துக்காகவா இப்படி ஓடியும் சாடியும் மோதியும விழுந்தும் புரண்டும் வேதனை அடைந்தார்கள் !

இந்த நிலைமை இனி நீடிக்கக் கூடாது. ஆகவே நமது அரசு, ஆட்டக்காரர் அனைவருக்கும் ஆளுக்கு ஒரு பந்தை வழங்கி ஆடச் செய்து பந்துக்கு ஏறபட்ட பஞ்சத்தைப் போக்கும். இனிமேல் வீரர்களும் அமைதியாக ஆனந்தமாக நின்று விளையாடலாம்.''

அரசரது பேச்சைக் கேட்டமக்கள் நிலை எப்படி இருந்திருக்கும் ?

பந்து பிறந்த கதையை சொல்வதற்கு முன், பந்து பற்றிய சிந்தனையே இல்லாதவர்களின் நிலையினை விளக்கும் கேலிக் கதை ஒன்றினை முன்னே கூறினோம். இது ஒரு செவிவழிக் கதை. நகைச்சுவைக்காக நாடாள்வோர்பற்றி மைதானத்திலே பேசிக் கொள்கின்றபோது பிறந்த பொழுது போக்குக்கதை.

பந்து எப்பொழுது பிறந்தது? எங்கு பிறந்தது என்று கேட்டால், அது மக்கள் தோன்றிய காலத்தேதான் பிறந்தது எனலாம். விளையாட்டுணர்ச்சி தோன்றிய காலத்தே இந்த பந்து பற்றிய உணர்வும் தோன்றியது என்பார் ஆராய்ச்சி வல்லுநர்கள். வேறுபல விளையாட்டுக்கள் அக்கால மனிதர்களுக்கு இருந்தன என்றாலும், பந்து தோன்றியதன் காரணம ஆன்பமூடவும், பொழுது போக்கவும், நிரந்தரமான நீடித்த மகிழ்ச்சியைத் தரவுந்தான் என்பது பலருடைய கருத்தாகும்.

இந்த பந்து பற்றிய கருத்து, உருண்டையான கூழாங்கற்களில இருந்தே தொடங்கியிருக்கிறது. ஒழுங்கற்றவாறு அமைந்த உருண்டையான கற்களை விரல்களால் உருட்டி மகிழ்ந்த மக்கள், குச்சிகளால உருட்டித் தள்ளி ஓடி விட்டு மகிழ்ந்திருக்கின்றனர். இவ்வாறு உருண்டை கற்களின் சிறிய வடிவம, மரத்திலே பழுத்துத் தொங்கிய பழங்களின் அளவாக சிறிது சிறிதாகப் பெருகி பெரிதாகக் கொண்டே வந்திருக்கிறது.

முதலில கற்களையும, பிறகு கனிகளையும் உருட்டி விளையாடிய ஆதிகால மக்கள், மரத்தால, உருண்டையான கட்டைப் பந்துகளை உருவாக்கி ஆடினர். அதன் பிறகு, வேட்டையாடிய மிருகங்களைத் தோலுரித்து அதைத் தோல் பை போலத் தைத்து, அதனுள் மயிர் போன்ற பொருட்களைத் திணித்து ஆடி மகிழ்ந்தனர். பந்தின் அவசியமும் தேவையும் பெருகப் பெருக, நுட்பமும நூதனமும புரியப் புரிய தோல் பையினுள் காற்றடைக்கும வித்தையைக் கண்டுபிடித்தனர் என்பது சரித்திரம காட்டிவரும் சான்றாகும்.

என்றாலும், பந்தின் பிறப்புக்கு எகிப்தில் வழங்கப்படுகின்ற கதை அதிசயமாக மட்டுமல்ல, அதியற்புதமாகவும் விளங்குகின்றது.

வண்ண வண்ணக் கோலங்களை வாரி வழங்குகின்ற வசந்த காலம் வந்துவிட்டால் போதும். எகிப்தியர்களுக்கோ இனம்புரியாத இன்பம் இதயமெங்கும் பரவத் தொடங்கி விடும். இயற்கை எழில் சிந்துகிறது என்பதனுலா என்று கேட்டால், அதைவிட முக்கியமான காரணம் வேறென்றும் இருக்கிறது. இன்பத்துள் இன்பங்காணுகின்ற அவர்கள், வசந்த விழா எடுக்கிருர்களா என்ருல் நிலை அப்படித்தான். இறந்துபோன இறைவன் மீண்டும் உயிர்த்தெழுகின்ருன் என்று கொண்டாடும் கோலாகலமான விழா அது.

இறைவனுவது இறந்து போவதாவது? என்று கேட்க வேண்டும்போல் இருக்கிறதல்லவா! எகிப்து நாட்டிலே அப்படித்தான் சம்பிரதாயம். ஆமாம். எகிப்தியரின் மதம் அப்படி, அது இரு கூருக அமைந்திருந்தது. நன்மை என்று ஒருபுறமும். தீமை என்று மறுபுறமும் பிரிக்கப்பட்டிருந்த தோடு, அவைகளைக் காக்கக் கடவுள்களும் தலைமை ஏற்று இருந்தனர்.

தீமையைக் காக்கின்ற கடவுளின் பெயர் 'செட்' என்பத. நன்மையைக் காக்கின்ற கடவளின் பெயர் 'ஓசிரிஸ்' என்பது. இரு கடவுள்களுக்கும் எப்பொழுதும் போராட்டந்தான். உலகை யார் ஆள்வது? தலைமை எற்பது என்ற அந்த ஓயாத போரில். மழைக்காலம் வந்துவிட்டால், 'செட்' கடவுளுக்கு வலிமையும் வேகமும் அதிகமாகிவிடும். போரில் ஓசிரிசைக் கொன்றுவிடும். உயிரிழந்த ஓசிரிஸ். வசந்த காலம் வருகின்றவரை இறந்தபடியே இருந்து, மீண்டும் உயிர் பெற்று வந்துவிடுகிறது என்பது மக்களின் மாருத நம்பிக்கை யாகும்.

இவ்வாறு. ஓசிரிஸின் உயிர் நீங்கும் கதையையும், உயிர்த்தெழுகின்ற நிலையையும், நையாண்டி நாடகமாக நடத்த முற்பட்டு, அதன் மூலம் ஓசிரிஸின் உன்னதமான

அன்பையும், அனுக்கிரகத்தையும் அடைய எகிப்தியர்கள் முயல்வது மத வழக்கமாக மாறிவிட்டிருந்தது.

அதனால், வசந்த காலம் வந்த உடனேயே, ஓசிரிஸின் பக்தர்கள் அத் தெய்வத்தின் அமைப்புள்ள சிலை வடிவை ஏந்திக்கொண்டு, தெருவெங்கும் ஊர்வலமாக வந்து, பாப்ரமிஸ் எனும் ஆலயத்திற்குள் நுழைய முயற்சி செய்வார்கள். அந்தக் கோயிலைக் காத்து நிற்கின்ற செட் கடவுளின் பூசாரிகளும், அவர்களது அனுதாபிகளும் ஊர்வலம் வந்தவர்களை வழியிலும், வாசலிலும் நின்று தடுப்பார்கள் இந்த உரிமைப் போரின் உச்சக்கட்டம், இரு பக்கத்தாரும் வளைவான கம்பிகளினால் தாக்கிக்கொள்ள, இறுதியிலே கொலையிலே வந்து முடியும். இவ்வாறு ஒவ்வொரு வசந்த காலத்திலும உயிர்க் கொலைகள் மிகுந்து கொண்டே போவதைத் தடுக்கவேண்டும் என்று விரும்பிய மக்கள், வேறு ஒரு புது முறையைக் கையாளத் தொடங்கினர்.

மனிதர்களின் ஊர்வலத்திற்குப் பதிலாக (பொம்மலாட்டத்தில் பயன்படுகின்றது போல்) தோல் பொம்மைகளை வைத்து, அவைகளை மோதிக்கொள்ளச் செய்து, வேடிக்கை பார்த்து மகிழ்ந்தனர் எகிப்தியர்கள்.

அந்தத் தோல் பொம்மைகள் அடிக்கடி சண்டை சமயத்தில் அடிக்கப்படும்போது கிழிந்து போகத் தொடங்கின. உடல் கிழிந்து போனாலும் உருண்டைவடிவமான தலைப்பாகம் மட்டும் தனியாகத் தெரியத் தொடங்கியது. அந்தத் தலைகளே அவர்களுக்குத் தாக்கப்படும பிரதான பொருளாகவும் தெரியத் தொடங்கின.

ஆகவே, உருண்டைப் பொருளான தலையை மட்டும் வைத்துக்கொண்டு தாக்கினால் போதும் என்று எதிரெதிர்க் குழுவைச் சேர்ந்தவர்கள் எண்ணத் தொடங்கினர். அவ்வாறு

உருண்டையாகத் தோன்றிய அந்த அடிபடும் தலையின் அமைப்பே, இக்காலப் பந்தின் வடிவமைப்புக்குக் காரணமாகி விட்டது என்ற அதியற்புதக் கதையே இன்றும் உலவி வருகிறது.

தீமைக் கடவுளுக்கும் நன்மைக் கடவுளுக்கும் உரிய அன்பர்கள், எதிரெதிர்க் குழுவினர்களாகவும், அவர்கள் கையில் வைத்துத் தாக்கிய தடிகளே ஆடப் பயன்படும் கோல்களாகவும், தோல் பொம்மையின் உருண்டை வடிவமே பந்தின் அமைப்பாகவும் மாறி வந்தது என்பது பலர் கருத்து.

மேற்கூறிய நிகழ்ச்சியும், கதை அமைப்பும் கி. மு 2000 ஆண்டுகளுக்கு முன் எகிப்திலே நடந்ததாக சரித்திரச் சான்றுகள் தெரிவிக்கின்றன. உலகெங்கும் பந்து விளையாட்டு பற்றிய நிகழ்ச்சிக் குறிப்புகள் நிறைந்திருக்கின்றன என்றாலும், தமிழ் இலக்கியத்திலும், வடமொழி இலக்கியத்திலும்கூட பந்து பற்றிய குறிப்புகள் நிறைய இருக்கின்றன.

நம் நாட்டின் பண்டைய புராண இதிகாச இலக்கியமான வான்மீகி இராமாயணத்தில், சீதை பூக்களினால் ஆக்கப்பட்ட பந்து ஒன்றை வைத்துக்கொண்டு தன் தோழியர்களுடன் விளையாடிக்கொண்டிருந்ததாக ஆசிரியர் அழகாக விளக்கிச் செல்கின்றார்.

ஐம்பெருங் காப்பியங்களில் ஒன்றான நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரத்தில், 'கந்துகவரி' என்ற அமைப்பில், பெண்கள் பந்தாடி, அரசர்களையும் அவர்களது ஆற்றல்மிகு செயல்களையும் புகழ்ந்து பாடுவதாக இளங்கோவடிகள் கவி புனைந்துள்ளார்.

சிந்தாமணியில் வருகின்ற சீவகனின் மனைவி ஒருத்தி பந்து விளையாடியதாகவும், மற்றும் பல இலக்கிய நூல்களில் பந்து பற்றிய குறிப்புகளும் தெரியக் கிடக்கின்றன. ஆகவே

பந்து என்பது எல்லோரும் அறிந்த ஒன்றுதான். ஆனால், நம் நாட்டுப் பந்து, பெண்களின் மென்மையான கைகளுக்கேற்ப பூக்களில் ஆக்கப்பட்ட பந்தாகவே பரிணமித்திருக்கின்றது. பந்தாட்டம் பெண்களுக்குரிய ஆட்டங்களில் ஒன்றாகும்.

மேல் நாடுகளில் ஆண்கள் ஆடக்கூடிய விளையாட்டுக்களில் பந்து இடம் பெற்றிருந்தாலும், பூப்பந்தாக இல்லாமல் கடினப் பந்தாகவே காட்சியளிக்கின்றது. என்றாலும். பந்து எல்லாம் உருண்டை வடிவமாகவே அமைந்திருக்கின்றது என்பதையும், அது காலம் தந்த கற்பனையின் வடிவால் பிறந்து, அடுத்தடுத்து வந்த அற்புத அனுபவத்தினால்; கனிந்து, இன்று துள்ளி ஓடும் தன்மையிலே மலர்ந்து வளர்ந்திருக்கிறது என்பதே பொருந்தும்.

என்று பிறந்தது. எங்கு பிறந்தது பந்து என்ற கேள்விகளுக்கெல்லாம் ஆதிகாலந் தொட்டே பிறந்தது என்ற ஒரு விடையோடு நாம் திருப்தியடைந்து விடுகிறோம்.

இன்று சிறந்து விளங்கும் விளையாட்டுக்கள் அனைத்திலும், பந்து இல்லாத ஆட்டமே இல்லை என்ற அளவுக்கு பந்து இடம் பெற்றிருக்கின்றது. அந்தப் பந்துகளின் அளவு $1\frac{1}{2}$ அங்குல விட்டத்திலிருந்து 6 அடி விட்டம் அளவுள்ளது வரை பெரிதாக அமைந்திருக்கின்றன. 'ரக்பி' என்ற ஆட்டத்திற்குரிய பந்து மட்டுமே தேங்காய் வடிவம் கொண்டதாக உள்ளது. மற்ற எல்லா ஆட்டத்திற்குரிய பந்துகள் அனைத்தும் உருண்டை வடிவானவையே.

பந்துகள் பலவிதம் என்றாலும் மக்களுக்காகப் பயன்படுவதில் ஒரேவிதமாக, ஒரே இனமாக, ஒரே தரமாக இருந்து, மக்கள் இனத்தை மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்துகின்றன. மக்கள் மனதை மகிமைப்படுத்துகின்றன.

# 2. பந்து தந்த கதைகள்

இதயம் கவர்கின்ற இதிகாசங்கள், புண்ணிய வழியைக் காட்டுகின்ற புராணங்கள், எண்ணற்ற எண்ண எழுச்சியூட்டும் இலக்கியங்கள் எதனை எடுத்தாலும், எத்தனை ஏடுகளைத் திருப்பினாலும், பெண்களுக்கு விருப்பமானது எது என்று நாம் பார்க்கும்போது, "பந்தாட்டந்தான்" என்ற குறிப்பே எங்கும் நிறைந்து கிடக்கிறது..

அகத்திலே அம்மானை ஆடுதல்; அழகுமிகு சோலைகளில் புகுந்து தோழியர்களை தேடிப்பிடித்து விளையாடுதல்; நீர்ச் சுனைகளில் விழுந்து நீந்துதல்; நிழல் தரும் மரங்களில் ஊஞ்சல் ஆடுதல் போன்ற மகிழ்வு தரும் விளையாட்டுக்கள் எத்தனையோ இருந்தாலும், மங்கையர்கள் மனம் கவர்ந்த ஆட்டம் பந்தாட்டமே, குதிரையேற்றம், யானையேற்றம், குத்துச் சண்டை, வீர முழக்கமிட்டு வேல் எறிதல், போர்க் களம் புகுதல் என்று ஆண்மை மிகு நிகழ்ச்சிகளில் எல்லாம் ஈடுபட்டு ஆண்குலம் மகிழ்ந்தபோது, மென்மையும் தன்மையும் நிறைந்த கன்னியர்களின் நெஞ்சமெலாம் பந்தாட்டத்திலேயே மூழ்கிக் களித்தது.

மேகம் போன்ற நடை, மெல்லிய பாலாடை போன்ற உடை, பொய்யோ எனும் இடை, பொலிவுமிக்கப்படை என்று புலவர்களால் வருணிக்கப் பெறும் பெண்கள், ஆனந்தக் களிப்பேறி விட்டால், பந்தை எடுத்துக்கொண்டு பலராய் கூடிநின்று ஆடுவார்கள், பாடுவார்கள், ஓடுவார்கள். அத்துடன் நிற்காமல் பந்தை இழந்துவிட்டும் தேடுவார்கள்.

ஆமாம், இவ்வாறு பந்தைத் தரையிலே மோதிக் குதிக்க விட்டு, காற்றிலே மிதக்க விட்டு, இன்பம் தங்களைத் துதிக்க விட்டு விளையாடும் அழகியர்கள் தாங்கள் ஆடிய பந்தை இழந்து விட்டு பட்ட பாடும், கெட்ட கேடும், பந்தை இழந்து விட்டு நின்ற கோலமும் கொண்ட சீலமும் போன்ற சூழ்நிலைகளை இதிகாசங்களில் நாம் நிறையக் காணலாம்.

பருவப் பெண்கள் பந்தைத்தான் ஆடி மகிழ்ந்தனர் என்றால், ஆடப்பெறும் பந்துகளோ, அவர்களது வாழ்வை எப்படி எப்படியெல்லாம் பந்தாடி இருக்கின்றன என்பதை அறியும்போது, நம்மையறியாமலேயே நாம் நெகிழ்ந்து விடுகின்றோம். நீண்ட பெருமூச்சு விடுகின்றோம்.

ஊராளும் மன்னன் மகள் அவள். ஒப்பற்ற அழகி, பெண்களே கண்டு பேராசை கொள்ளும் பேரழகி. அவளைச் சுற்றி ஆரணங்குகள் கூட்டம் இருந்தாலும், விண்மீன்களின் நடுவிலே வெண்ணிலவு போலத் திகழ்பவள் அவள். உல்லாசமாகப் பொழுதுபோக்க எத்தனையோ வழிகள் இருந்தாலும், பந்து விளையாடுவதில் மட்டுமே பரிபூரண இன்பம் காண்பவள்.

ஒருநாள், தனியே இருந்த அவளுக்கு, தாங்க முடியாத தனிமை கொல்லவே, தனது இன்ப வழியான பந்தை எடுத்து, உப்பரிகை மீதிருந்தே ஆடத் தொடங்கினாள். தன்னை மறந்து பந்தாடும்போது, துள்ளிக் குதிக்க விட்ட பந்தானது,

ம
ரடியிலிருந்து வெளிப்புறமாக விழுந்து மறைந்து விடுகிறது. பந்தைத் தேடும் ஆவலில், அவள் விழிமீன்கள் பாயத் தொடங்கின. ஓரிடத்தில் வந்தபோது மயங்கி நின்றன. அங்கே ஒரு அழகான வாலிபன் நின்று கொண்டிருந்தான். 'அவளும் நோக்கினுள். அவனும் நோக்கினுன்,' கண்டதும் காதல் என்பார்களே! அது அந்த அரசகுமாரிக்கு வந்து விட்டது.

என்ன செய்வது? இறங்கிவந்து பேச முடியுமா? யோசித்து ஏதாகிலும் செய்யலாமென்ருல். யாராவது வந்து விட்டால் காரியம் யாவும் கெட்டுப் போகுமே! அவள் உடனே ஒரு முடிவுக்கு வந்தாள். தன் பீலிவளைக் காதிலே அணிந்திருந்த காதோலையை எடுத்தாள். கை நகத்தைப் பதித்தாள், 'அன்பே, இரவு உம்மை ஊர்ச்சாவடியில் வந்து சந்திக்கிறேன்'' என்று எழுதி, அவன் முன்னே எறிந்து விட்டு மின்னலென மறைந்து போனுள்.

ஓலைபெற்ற இளைஞன் மனம் ஊளையிடத் தொடங்கியது. மாலையணிந்த மைவிழி அழகி, விழித்து நோக்கி, வீசி எறிந்து விட்ட ஓலையில் என்ன இருக்கும் என்று படிக்கத் தெரியாத முட்டாள், தற்குறி, பயந்து நடுங்கினுன். எதிரே வந்த ஒரு குஷ்டரோகியிடம். என்ன எழுதியிருக்கிறது இந்த ஓலையில் என்று கேட்டான். பட்டுமேனியாளின் மனமறியாப் பாவியாம் அந்த முட்டாளை ஏமாற்ற எண்ணினுன் அந்தப் புண்பிடித்த பொல்லாத நோயாளி. ''இன்று இரவுக்குள் இந்த ஊரை விட்டுப் போகாவிட்டால், நாளை காலை உன் தலை துண்டிக்கப்படும்'' என்று படித்தான், ஏற்கனவே பயந்திருந்த அவன் துடித்தான், பின்னும் இருப்பானே அங்கே! பயந்தேவிட்டான் பாழும் உயிரைக் காத்துக் கொள்ள.

இரவு வந்தது, உறவு தேடி வந்த ஒய்யாரியின் விரைவு ஊர்ச்சாவடிக்குள் நுழைந்தது, இருள் மறைவிலே காத்திருந்த

குஷ்டரோகியைத் தன் மனம் கவர்ந்த மன்மதன் என்று எண்ணிய அந்த மங்கை, தழுவினுள். தாகம் தீர்த்துக் கொண்டாள். பிறகு தான் தெரிந்தது அவள் பரபுருஷன் என்று. கொடுமையான நோய் கொண்ட குஷ்டரோகி என்று. சோரம் போனுேமே என்று மனம் வெதும்பிய அந்த இளவரசி அங்கேயே தன் உயிரை மாய்த்துக் கொண்டாள்.

பெண்ணழகியாக ஊர்ச்சாவடிக்குள் நுழைந்த அந்த இளவரசி, பேயாக மாறி அங்கேயே சுற்றத் தொடங்கி விட்டாள். அருந்தமிழ்ப் பாட்டி ஔவை, அங்கு வந்தவுடன் தான் அவள் பேயுருவம் மாறி பிறவியின் பாவம் தீர்ந்து பெருமைப் பெற்ருள் என்பது ஒரு கதை.

பந்து விளையாடிய பெண்ணுக்கு பாபம் வந்தது என்று தானே நினைக்கிறீர்கள்? சாபமும் வந்தது என்ருல் எப்படி இருக்கும் மனது?

தேவலோகத்தில், தெய்வமாது ஒருத்தி, தீராத இன்ப உணர்வுடன் பந்தாடிக் களித்தக் காட்சியைப் பார்த்துப் பொறுக்காத ஒரு வித்யாதரன் என்பவன், வானவெளியில் பறந்து மகிழும் ஒருவன், பந்தை உதைத்துவிட்டுப் போய் விடுகிருன். உதைபட்டு ஓடிய பந்தைத் தேடிக் களைத்த அந்த ஆரணங்கு அழுதே சோம்பிவிட்டாள். பெண்ணழகி வடிக்கும் கண்ணீர் கண்டு உலகம் பொறுக்குமோ என்னமோ, இந்திரனுக்கு பொறுக்குமோ? பொறுக்கவில்லை.

அழுகின்ற அழகியைப் பார்த்து ஆறுதல் கூறிவிட்டு, 'வந்தால் பந்துடனே வருவேன், இல்லையேல்? என்று வீர சபதம் எடுத்துக்கொண்டு, பந்து போன திசையுணர்ந்து பாய்ந்து போகிருன் இந்திரன். வெள்ளிமலை குறுக்கிடுகிறது. விழித்து நோக்குகிருன். அங்கே மாறுவேடம் அணிந்து சிவனும் பார்வதியும் சூதாடுபவர் போல உட்கார்ந்து

இருக்கின்றனர். அவர்கள் காலடியிலே தேவமாது ஆடிய பந்து கிடக்கிறது. பந்தைக் கண்டதும், பொங்கி யெழும் கோபத்தால் இடியென முழங்குகிருன் இந்திரன். ஏனெடுத்தாய் பந்தை? என்றுகேட்ட இந்திரனை ஏளனமாக பார்க்கின்றனர் தம்பதிகள். 'கன்னியின் பந்தைக் கவர்ந்த கள்ளனை கொல்கிறேன் பார்' என்று தனது வச்சிராயுதத்தை எடுத்து வீசக் கையை ஓங்குகிருன் இந்திரன்.

ஓங்கிய கை உயரேயே நின்று விடுகிறது. நடமாடும் நாயகனும் நாடகமாடும் சிவனுரைக் கொல்ல முயன்ற குற்றத்திற்காகக் கொடுஞ்சிறையிலே அவரால் அடைக்கப் படுகின்ருன். தங்களது தலைவனைக் காணுத தேவர்கள், சிவனுரின சிறையில் இருப்பதைக் கேள்வியுற்று, தேவகுருவின் உதவியால் சிறையிலிருந்து மீட்கின்றனர். தன் கறைபட்ட செயலுக்குக் கழுவாய் தேடிக் கொள்ளத் திருக்கழுக்குன்றம் சென்ருன் இந்திரன் என்பது திருக்கழுக்குன்றப் புராணம் கூறுகின்ற கதையாகும்.

பாபமும், சாபமும் தான் பந்து வாங்கித் தருமா என்ருல், பல்சுவை தரும் இல்லறச்சுவைக்கும் இட்டுச் செல்லும் என்று தைரியமாகச் சொல்லாம். ஆமாம்! சீதைக்கு இராமனைத் தேடித் தந்த நிகழ்ச்சி ஒன்று இருக்கிறதே!

பெண்ணென்ருல் சீதையாகப் பிறக்க வேண்டும் என்று அழகுக்கும், அறிவுக்கும் அடக்கத்திற்கும் சான்ருகக் கூறு வார்கள் பெரியோர்கள். சீதையானவள் மாவீரன் மன்னன் ஜனகனுக்கு ஒரே மகள் அல்லவா! செல்வச் செழிப்புடன் பருவக் கொழிப்புடன் விளையாடும் பாவையாக சீதை வளர்ந்து வரும் ஓர் நாளில்!

பூப்பந்தை வைத்து விளையாடிக் கொண்டிருக்கும் பொழுது கீழே விழுந்த பந்து. உருண்டோடித் தோட்டத் திற்குள் சென்று விடுகிறது. சென்ற பந்தைத் தேடிய

தோழிகள் பொந்து ஒன்றில் பந்து புகுந்த நிலைகண்டு மனம் புழுங்குகின்றனர். பந்தை எடுக்க வேண்டும் என்றால், அதிலிருக்கும் பெட்டி ஒன்றைப் புரட்டி எடுக்க வேண்டும்.

தோழிகள் முயன்றனர். தோற்றனர், அரசனிடம் சேதி சென்றது ஆணையிட்டான். சேவர்கள் வந்தனர். தோற்றனர். காலம் போவதைச் சகிக்காத பிராட்டி தானே வந்து, ஒரே கையால் எளிதாக அகற்றி அப்புறப்படுத்தி விட்டு, பந்துடன் சென்றுவிடுகின்றாள்.

மகள் செய்த செயலில் மனம் தடுமாறிய மன்னர்; அருகிருக்கும் பெட்டியைத் திறந்து பார்க்கிறார். அழகான பெரிய வில்லொன்று இருக்கிறது. பலர் கூடியும் தூக்க முடியாத பளுவை எளிதாகத் தூக்கிய எழிலரசிக்கு ஏற்ற மணாளன், இந்த மர்பெரும் வில்லைத் தூக்கி வளைக்கின்ற வில்லாளனாக, வீரனாகத்தான் இருக்க வேண்டுமென்று விரும்பினார். அவர் எடுத்த முடிவுதான் சீதையின் சுயம்வரம். அங்கேபோன இராமர், அவர் நிகழ்த்திய அற்புதம் எல்லாம் தான் நீங்கள் அறிந்த கதையாயிற்றே !

ஆரம்ப காலத்தில் பூச்சரத்தைப் பந்தாகச் சுருட்டிக் கட்டி விளையாடினார்கள் என்றும் அதுவே பிற்காலத்துப் பெண்களிடைத் துள்ளும் பந்தாக மாறி, உள்ளம் கொள்ளை கொள்ளும் ஒப்பற்ற ஆட்டமாக மாறி வந்திருக்கிறது என்றும் கூறுகின்றார்கள். இந்தத் துள்ளும் பந்தை வைத்துக் கொண்டுக் குற்றாலக் குறவஞ்சி ஆசிரியர், அதன் கதாநாயகி வசந்தவல்லியை வருணிக்கும் அழகே அழகு. கவர்ச்சியே கவர்ச்சி.

சிவபெருமான், தனது தானைத் தலைவர்களோடும் மானமறவர்களோடும், ஆள் அப்புசேனையுடனும். அரியபக்தர்களுடனும் உலா வருகின்றார். அவரின் அலங்காரத்தையும். அழகுத் திருக் கோலத்தையும் கண்டு பெண்குலமே பூரித்துக் கிடக்கின்றது. பேதைப் பருவத்திலிருந்து பேரிளம்

பெண்ணாக ஆகிவிட்ட பெண்கள் வரை, இதுவரை பெற்றிடாத பெரு மயக்கத்தில் மயங்கி நிற்கின்றபோது, குறவஞ்சிக் கவிஞர், தனது கதையின் நாயகியை அறிமுகப் படுத்துகின்றார்.

வசந்தவல்லி பந்தடிக்கின்றாள். அந்தப் பந்து துள்ளும் நிலைக்கேற்ப பாடலின் சந்தம் ஒலிக்கின்றது. வசந்தவல்லியின் மார்பகமிரண்டைப் பந்தாக்கி, குதிகால் இரண்டையும் சேர்த்து மேலும் இரண்டு பந்தாக்கி, கையிலுள்ள பந்தையும் அவள் ஐந்து பந்து ஆடிக் கொண்டிருக்கிறாள் என்கிறார். என்ன கற்பனை நயம்!

பந்தாடிக் கொண்டிருக்கும் பொழுதுதான் பவனி வருகின்றார் பரமன்: பார்வை விழுகிறது. பாசம் எழுகிறது. ஆசை தொடர்கிறது. ஆனந்தம் உயர்கிறது. இவ்வாறு கதை வளர்கிறது

இவ்வாறு கவிஞர்கள் காண்கின்ற கவின்மிகு காட்சியில், பெண்கள் ஆடிய பந்தாட்டம் எவ்வாறெல்லாம் இடம் பெற்று இருக்கின்றது என்பதை நாம் அறியும்போது, நம்மையும் அறியாமலேயே நமது நெஞ்சம் நிறைந்த இன்பங் காண்கிறது.

பந்து துள்ளி விழுகின்ற காட்சி, துள்ளி எழுகின்ற காட்சி இவற்றைவிட, பாவையர்கள் துள்ளிக்குதித்த அழகின் காட்சியைத்தான் கவிஞர்கள் சொற்களிலே வடித்துக் காட்டியிருக்கின்றனர். அக்காலத்திலிருந்தே அலைபாயும் நெஞ்சத்திற்கு அமைதி காணவும், அழுது வடியும் பொழுது போக்கி ஆனந்தம் தேடவும், இளவயது பெண்கள் எல்லோரும் ஒருங்கேகூடி இன்பம் கொள்ளவும், வளமையும் மென்மையும் நிரம்பிய மேனியைக் கட்டாகவும் செட்டாகவும் வைத்துக் காப்பாற்றவும் பெண்கள் பந்தாட்டத்தைப் பெரிதும் விரும்பினர். போற்றினர். ஏற்று மகிழ்ந்தனர்.

சிந்தை கவரும் பந்து விளையாட்டை எந்த நிலையில் இருந்தாலும் அந்தக் காலத்தில் பெண்கள் ஆடி மகிழ்ந்தனர். அவர்கள் ஆடி மகிழ்ந்ததை, கூடி மகிழ்ந்ததைக் கண்டும் கேட்டும் சுவைத்தக் கவிஞர்கள் கவிநயம் சொட்டச் சொட்டத் தங்கள் கவிதையில் பாடி மகிழ்ந்தனர். சுவையாரம் சூட்டிப் புகழ்ந்தனர். படித்து நாமும் மகிழ்வோம். பெண்கள் பந்தாட்டத்தை வளர்த்து பெரும் புகழ் கொள்ள நாம் உற்சாகப்படுத்துவோமாக!

பந்து, கதைகளை மட்டும் பிறப்பிக்கவில்லை; பாங்கான பலதிறப்பட்ட விளையாட்டுக்களையும் மிகமகப் பக்குவமாகப் பிறக்க வைத்திருக்கிறது என்பதைச் சரித்திரச் சான்றுகள் நயம்பட உரைக்கின்றன. அவ்வாறு பிறந்து வளர்ந்து, விரிந்த விளையாட்டுக்கள் பற்றி இனி காண்போம்.

# 3. பந்தால் பிறந்த விளையாட்டுக்கள்

அறிவு தெளிவடையாத காலம். ஆதிகால மக்களை ஆண்மை ஒன்றே ஆண்டு கொண்டிருந்த நேரம். உலகில் வாழ்வதற்கும், உடலை பாதுகாத்துக் கொள்வதற்கும், முற்கால மக்களினம் வலிமை ஒன்றையே நம்பி வாழ்ந்தது. வனத்தில் வாழ்கின்ற மிருகங்களைக் கொன்று குவித்துத் தின்று சுவைத்து, இயற்கையை எதிர்த்து வாழப் பழகிக் கொண்டிருந்த சூழ்நிலை. கற்காலம் கை கொடுத்தபோது, உறங்க இடம் பார்த்தனர். உடல் நிர்வாணத்தை மறைக்க இலை தழைகளால் உடை சேர்த்தனர், இடமும், உடையும், உணவும் தங்கு தடையின்றித் தாராளமாகக் கிடைக்கத் தொடங்கியதும், அந்த இனம் ஓய்வென்று உட்காரத் துவங்கியது. களைப்புத் தீர்ந்து களிப்பெய்தியது.

வேலையில்லாத நேரங்களில், நீர்ப் பரப்பில் பாசிபோல மனிதரை சோம்பல் பிடிக்கவே, விழித்துக் கொண்டது மனித மூளை. வேறு ஏதாகிலும் செய்தால்தான் பரபரப்புடன் பணியாற்றலாம். தேகத்தைத் திடமான நிலையிலே வைத்

திருக்கலாம். 'தேடி வரும் மிருகங்களை சாடி தற்காப்புக்குத் தயாராயிருக்கலாம்' என்று உணர்ந்து கொண்ட மூளை, அதற்குத் தக்க வழி என்ன என்று கேட்ட கேள்விக்கு விடையாகப் பிறந்துதான், விளையாட்டாக மலர்ந்தது.

ஒருவருக்கொருவர் தொட்டு விளையாடுவது ஓடிப்பிடித்து ஆடுவது, மறைந்திருந்து கண்டு பிடித்து, விளையாடுவது போன்ற நிகழ்ச்சிகள், வேட்டையாடுதல், நீருள் புகுந்து, நீந்துதல் எல்லாம் சலிப்பைத் தந்தபோது, சுவையில்லாத சூழ்நிலையைக் கொடுத்த போது, ஏதாவது ஒரு துணைப் பொருளுடன் ஆடினால்தான். சுவையாக இருக்கும் என்று ஏங்கியது உள் மனம். இல்லாத ஒன்றுக்குத்தான் மனம் ஏங்கும் என்றாலும் "தேவைதானே கண்டு பிடிப்பின் தாய்" அந்த நிலையிலே அறிவு தன் ஆராய்ச்சியைத் தொடங்கியது.

உட்கார்ந்து யோசித்துக் கொண்டிருக்கும் நேரத்தில் மரங்களில் தொங்கிக்கொண்டிருக்கும் கனிகள். மண்ணில் விழுந்து உருண்டோடியதும், மழமழவென்றிருக்கும் உருண்டைக் கூழாங்கற்கள். கால் பட்டு உருண்டோடியதும் அவர்கள் கண்ணில் பட்டன. நெஞ்சைத் தொட்டன. உருண்டைப் பொருள்களை எடுத்து உருட்டி விட்டால் எப்படி இருக்கும் என்ற உணர்வில் எழுந்து விட்ட உற்சாகம், கனிகளையும் கற்களையும் எடுத்து உருட்டத் தொடங்கியது. பள்ளம் நோக்கி அவைகள் துள்ளி ஓடியதுபோல, உள்ளமும் துள்ளியது உவப்பால், உற்சாகத்தால். விரல்களால் தள்ளினர். விழிகளால் அள்ளினர். வேட்கை தணிந்ததால் விம்மினர் மகிழ்ச்சி பொங்க, சின்னஞ்சிறு பழங்கள் கற்களிலிருந்து, பெரிய அளவுள்ள பழங்கள் எல்லாம் அவர்கள் ஆனந்தத்தில் பங்கேற்றன. ஆர்வப் பசியைத் தீர்த்தன.

காலம் மாறிக் கொண்டே வந்தது. மக்கள் கற்பனையும் மலர்ந்து, விரிந்து கொண்டே வளர்ந்தது. விரல்களால் உருண்டைப் பொருட்களைத் தள்ளி விளையாடிய போதும், பந்து நின்றபோதும் அதனை மீண்டும் தள்ளிவிட, சிறு சிறு குச்சிகளைப் பயன்படுத்தினர். அந்தச் சின்னஞ் சிறு சுள்ளிகள், பெரிய கம்புகளாகப் பிற்காலத்தில் மாறி வந்தன, வளர்ந்தன.

கற்களையும், பழங்களையும் அகற்றிவிட்டு, அதே அளவுள்ள பொருளாக, மரத்தில் கட்டைகளால் உருவாக்கினர். அதனை அடித்து உருட்ட, பெரிய வளைந்த கம்புகளைப் பயன்படுத்தினர். செவ்விந்தியர்கள் கூட்டம் இப்படித்தான் ஆடியது. மேலை நாட்டு மக்கள் ஆதிகாலத்தில் இப்படித்தான் ஆடினர் என்று வரலாறு கூறுகிறது.

பின்னும் ஆட்டம் வளர்ந்தது. இங்கிலாந்து மக்கள் பல நூறு ஆண்டுகளுக்கு முன்னே, எதிரிகளை இழிவு படுத்து வதற்காக, அவரது மண்டை ஓடுகளைத் தோண்டி எடுத்து, உதைத்தாடி மகிழ்ந்தனர். அந்த ஆட்டம் கால் வலியை ஏற்படுத்தவே, அந்த மண்டை ஓட்டின் அளவிலே பந்து வேண்டும் என்ற தேவையால், பந்தின் வடிவம் அதே அளவாகப் பரிணமித்தது.

தோல்பை தோன்றியது. அதனுள் வைக்கோலைத் திணித்து ஆடினர், பஞ்சை அடைத்தும் மயிர்க் கற்றைகளை செலுத்தியும் பந்தாக உருமாற்றி இன்பங் கண்டனர். தோல் பையினுள்ளே மெல்லிய தோலுறை (Bladder) ஒன்றைப் புகுத்தி, அதனுள் காற்று செலுத்தித் துள்ளும் பந்தாக மாற்றினர், கீழே கிடக்கும்போது காலால் உதைத்தும், மேலே கிளம்பும்போது கையால் அடித்தும் மகிழ்ந்தனர்.

தனியாக ஆடிக் கண்ட இன்பம் தணியத் தொடங்கிய சூழ்நிலையில், துணையாகப் பலர் இருந்தால் துடிப்பாக ஆட

லாம் என்பதை மக்கள் உணர்ந்தனர். அதுவே கூடி விளையாடும் குழுவிளையாட்டுகளாகப் பிறந்து பரிணமித்தன. ஆட்டக்காரர்கள் பலராக மாறினாலும் ஆடப்பெறும் பந்தும், அந்தந்த சூழ்நிலைக்கேற்பவே மாறத் தொடங்கியது. ஆகவே பந்தின் எடையும், தரமும், அளவும் நிலையும் மாறி மாறி வரத் தொடங்கியது. இவ்வாறு மாறிய பந்துகளை ஆராய்ச்சி அறிஞர்கள் மூன்று வகைகளாகப் பிரித்துக் காட்டினர்.

பந்து தொடங்கிய காலத்தில், கல்லும் மரக் கட்டைகளுமே பழக்கத்தில் பயன்பட்டு இருந்ததைப் போல் ஒரு சில பந்துகள் மிகவும் கடினமாக, கல்போல அமைந்தன. கெட்டியாக அமைந்த அப் பந்துகள் கிரிக்கெட் வளைகோல் பந்தாட்டம், குழிப் பந்தாட்டம். (Golf) தளப் பந்தாட்டம் போன்ற ஆட்டங்களில் பயன்படுத்தப்பட்டன!

பந்தின் கடினத்தையும், கனத்தையும் பொறுக்க இயலாத காரணத்தால் தான் அவைகளை வளைந்த கோல்களைக் கொண்டு, ஓங்கி அடித்து விளையாடினர். கைகளாலும், கால்களாலும் இயல்பாக சுகமாக விளையாடும் விருப்பத்திற் கேற்ப வேதனை தெரியாமல் விளையாட, காற்றடித்தப் பந்துகளைக் கண்டனர். அதாவது தோலுறையுள் காற்றைச் செலுத்தித் துள்ள விட்டு ஆடினர். ஆகவே, உருளும பந்தின் தன்மை மாறி, உயரே துள்ளும பந்துகளாகி கைப்பந்தாட்டம் கால்பந்தாட்டம், கூடைப் பந்தாட்டம் போன்ற ஆட்டங்களில் இடம் பெற்றன.

துள்ளும் பந்து தோன்றினாலும் அதிலே இன்னும் மெல்லிய தன்மையில் இயங்கும் பந்தை உருவாக்க முடியுமா என்று ஆராயத் தொடங்கி விட்டனர் ஆர்வமுள்ளவர்கள். துள்ளவும் வேண்டும் அதே நேரத்தில் ஆடுதற்கு மிகவும் இலேசாகவும் இருக்கவேண்டும் என்று முயன்று கண்டுபிடித்தனர். அதன் விளைவுதான் மேசைமேல் ஆடு

கின்ற மேசைப் பந்தாட்டம், தரைமேல் ஆடுகின்ற துள்ளடிப் பந்தாட்டம் தோன்றின (டென்னிஸ்).

இவ்வாறு பந்தின் செய்வகைகள் பெருகியது போலவே விளையாட்டுக்களும் வகைவகையாக வளர்ந்துகொண்டே போயின. மனிதன் வசதியையும், வாய்ப்பையும், தேவையையும் பார்த்துப் பார்த்து விளையாட்டின் குறிக்கோளையும் புதிய புதிய பாணியில் தோற்றுவித்தான்.

பொழுது போக்குவதற்காகத்தான் விளையாட்டுக்கள் என்றாலும், மனதுக்கு இன்பம் விளைவிக்கவும், மனித சக்தியை மிகுதிப்படுத்திக் கொள்ளவும், மனித செயல் திறன் நுணுக்கத்தை விரிவுப்படுத்திக் கொள்ளவும் என்பதற்காகவே விளையாட்டுக்கள் பிற்காலத்தில் பணிபுரியத் தொடங்கின. அந்த அடிப்படையிலே தான் ஆட்டத்தின் நோக்கங்களும் மாறின. அவ்வாறு மாறிப் பிரிந்த ஆட்டங்களை நான்கு வகையாக நாம் பிரிக்கலாம்.

1. **இலக்கு விளையாட்டுக்கள் :-** இலக்கு என்று ஒன்று ஆடுகளத்தின் இருபுறமும் இருக்கும்... எதிரெதிராக நின்று இரு குழுக்கள் ஆடும். பந்தை உதைத்தோ, அடித்தோ, தள்ளியோ, தட்டிக்கொண்டோ எதிர்க்குழு காத்துக் கொண்டிருக்கும் இலக்கினுள்ளே பந்தை செலுத்த ஒரு குழு தாக்கும். இன்னொரு குழு தடுக்கும், இவ்வாறு பந்தைச் செலுத்த தாக்கியும், தடுத்தும், முற்றுகையிட்டும், முழக்கியும் வெற்றி காண விழைகின்ற ஆட்டங்களே 'இலக்கு விளையாட்டுக்கள்' என்று அழைக்கப்பெறுகின்றன.

இவ்வாறு, 24 அடி அகலமுள்ள குறுக்குக் கம்பத்தாலும் 8 அடி உயரம் உள்ள இரு கம்பங்களுக்கிடையே அமைந்த பரப்பளவை, பக்கத்துக்கு ஒரு இலக்காகப் பெற்று கால் பந்தாட்டம் ஆடப் பெறுகிறது.

12 அடி அகலமும், 7 அடி உயரமும் உள்ள மூன்று கம்பங்களால் அமைக்கப்பெற்ற இலக்கினைப் பெற்று

வளைகோல் பந்தாட்டம் விளையாடப் பெறுகிறது. இரும்புத் தூண்களில் பொருத்தப் பெற்ற பலகையில், 10 அடி உயரத்தில் பாதிக்கப்பட்ட வளையம், கூடைப் பந்தாட்டத்தின் இலக்குக் குறியாக இருக்கிறது. குதிரைமேல் ஏறிக் கொண்டு ஆடுகின்ற ஆட்டப், நீர்ப்பந்தாட்டம் போன்றவை எல்லாம் இலக்குக் விளையாட்டுக்களுக்குச் சான்ருகும்.

(2) வலைகட்டி ஆடும் விளையாட்டு :- இரு ஆடுகளப் பகுதிகளுக்கு நடுவே உயரத்தில் கட்டப்பட்டிருக்கும் வலைக்கு இரு பக்கத்திலும் இரண்டு குழுக்கள் எதிரெதிராக நின்று வலைக்கு மேலே பந்தை மாற்றி மாற்றி கையாலோ அல்லது பந்தாடும் மட்டையாலோ அடித்து ஆடுகின்ற ஆட்டத்திற்கு மேலே காணும் பெயர் உண்டாயிற்று. பந்தை ஆடாது தவற விடுகின்ற குழு ஒரு வெற்றி எண்ணை இழக்கும் அல்லது அதற்காக எதிர்க்குழு ஒரு வெற்றி எண்ணைப் பெறும். கைப்பந்தாட்டம், பூப் பந்தாட்டம், வளையப்பந்தாட்டம் மேசைப் பந்தாட்டம் போன்ற ஆட்டங்கள் வலைகட்டி ஆடும் விளையாட்டுகளுக்குப் பொருந்தும்.

(3) தடுத்தாடும் விளையாட்டு :- ஒரு குழுவில் உள்ள ஒருவர் பந்தை வீசி எறிய, மறு குழுவைச் சேர்ந்தவர் மட்டையாலோ அல்லது நீண்ட தடியின் உதவியாலோ எறியப்படும் பந்தினைத் தடுத்தாட, அடிபட்டுப் போகும் பந்தினை எறிந்த குழுவினர் நிறுத்திப் பிடித்து ஆட, அதனால் பெறுகின்ற ''ஓட்டங்கள்'' கணக்கிடப் பெற்று வெற்றி தோல்வியை நிர்ணயிக்கின்ற விளையாட்டுக்களுக்கு கிரிக்கெட், வளப்பந்து போன்றவை சான்ருக அமைகின்றன.

(4) குறிவைத்தாடும் விளையாட்டுக்கள் :- மனிதன் பிறந்த காலந் தொட்டே தூரத்தில் உள்ள பொருட்களைக் கல்லை விட்டு எறிந்து (மரத்தில் மாங்காய் அடிப்பது போல.) மகிழும் பழக்கம் இருந்து வருகிறது. பல பொருட்களை ஒன்ருக

அடுக்கி வைத்து, எட்ட இருந்து அதைப் பந்தால் குறி பார்த்து மடிப்பதுபோல, பல பந்துகளை மேசை மேலே வைத்து அதன் முனை கொண்ட கம்பினால் குத்திக் குழியிடை விழவைக்கின்ற 'பிலியர்ட்ஸ்' (மேசைக் குழியாட்டம்) கேரம் போன்ற ஆட்டங்கள் குறிவைத்தாடுகின்ற ஆட்டத்திற்கு உதாரணமாய் விளங்குகின்றன.

இவ்வாறு மனித இனம் மலர்ந்ததிலிருந்தே பிறந்து வளர்ந்து, மனிதரை மகிழவைக்கும் உற்ற தோழனாய், உயிர் காக்கும் நண்பனாய், குலம் காக்கும் வழிகாட்டியாய், குணம் வளர்க்கும் அன்னையாய், இன்ப நலம் காட்டும் ஆசானாய் விளையாட்டுக்கள் வருகின்றன.

நம்மைக் காக்க வந்த விளையாட்டுக்களை, நச்சுப்பொய்கை என்று எண்ணி நடுங்காமல் நா கூசாமல் புறங் கூறிப் பழித்துப் பேசும் பண்பினை ஒழித்து, 'மனக்கவலை மாற்றும் மாமருந்தாய், இன ஒற்றுமை வளர்க்கும் எழில் துணையாய் எண்ணி, இளைஞர்களை அன்புடன் விளையாட வைத்து அவர்களுக்கு உற்சாகம் ஊட்டி, ஆன்ற கலைகளை வளர்த்துக் கொள்ள அனுபவத்தைக் கூட்டி, பாரத இனம் பாரிலே பெருமை கொள்ளும் வகையால் விளையாட்டு வீரர்களை உண்டாக்கும் நிலையில் நாம் வாழ வேண்டும் என்பது நல்லோரின் பேரவா!

நாமதைக் காப்போம்; நாளும் உழைப்போம், நெடும் புகழ் சேர்ப்போம்!

# 4. விளையாட்டில் விளைந்த வெறித்தனம்

உலகெல்லாம் உணர்ந்து ஓதுதற்குரிய இறைவனை, "அலகிலா விளையாட்டுடையான்" என்று கம்பர் அனுபவித்துப் புகழ்ந்து பாடுகின்றார். ஆண்டவனே விளையாட்டுப்பிள்ளையாகத் திகழும்போது, அவன் படைப்பில் உருவான ஆறறிவு படைத்த மக்கள் மட்டும் வாளா இருப்பார்களா ?

நீர்வாழினம் நீந்தி விளையாடி மகிழ்கின்றது. பறவையினம் பறந்தோடிக் களிக்கின்றது. ஊர்வனவும் ஊர்ந்து உவகை பெறுகிறது. ஊர்ந்து, நிமிர்ந்து, நடந்து ஓடி ஆடும் மனித இனம் மட்டும் விளையாடுவதற்கும் களிப்படைவதற்கும் விதி விலக்காக இருக்க முடியுமா ? விலங்கினத்திலிருந்து மனித இனம் பிரிந்ததிலிருந்தே மக்கள் கூட்டம் விளையாடி மகிழ்ந்திருக்கிறது என்பதற்கு எத்தனையோ ஆதாரங்கள் இருக்கின்றன. அதன் தொடக்கம்தான் வேட்டையாடுதல். வாழ்வுக்குப் பாதுகாப்பு என்று மிருகங்களைக் கொல்லப்போய்,

வயிற்றுக்கு அவை உணவு என்று ஆகிவிட்ட கதை தொடரவே, வேட்டையாடும் தொழில் விருத்தியடைந்தது வளர்ச்சி மிக்கதாய் காட்சி தந்தது.

வாழ்க்கை வசதி பெருகப் பெருக. தொழிலானது மக்களுக்கெல்லாம் பொழுதுபோக்காக மாறிவிட்டது. ஆரம்ப காலத்திலிருந்த மனிதனுக்குரிய அரக்க மனம், என்னதான் ஆறுவது அறிவு பண்பட்ட நிலைக்கு மாறி வந்தாலும், ஆங்காங்கே கொடுமைகளை விளைவிக்காமல் இருந்ததே யில்லை. விளையாட்டில் மட்டும் எப்படி இல்லாமல் இருக்க முடியும் ?

பொழுது போக்கவும், அலையும் மனதை ஆனந்தப் படுத்தவும், எல்லோரும் கூடி உல்லாசமாக மகிழ்ந்திருக்கவும், செய்யக்கூடிய விளையாட்டுக்களில் எல்லாம் வெறித்தனம் எப்படியெல்லாம் விளையாடியிருக்கிறது என்பதை வரலாறு காட்டும்போது, நாமெல்லாம் வாயடைத்துப் போய் விடு கிறோம். ஆதிகால வரலாற்றை படித்துப பாருங்கள் புரியும்.

'காரிருள் விலகாத காலைப் பொழுது, கைகளில் கரடு முரடான வளைந்த தடியைப் பிடித்திருக்க ஆயிரக்கணக்கான மக்களடங்கிய ஒரு கூட்டம் ஒருபுறம் நிற்கிறது. அதே கணக்கில் மற்றெரு புறம் வளைநத தடியுடன் இன்னொரு கூட்டம் இருக்கிறது. செவ்விந்தியர் கூட்டத்தினர்தான் அவர்களனைவரும். விளையாடத்தானேயன்றி வேறெதற்கும் நிற்கவில்லை.

இரண்டு கூட்டத்திற்கு இடையிலே மரத்தாலான சிறிய பந்து ஒன்று கிடக்கிறது. அந்தப் பந்தை அடித்து எதிர்க் குழுவினருக்குரிய எல்லையில் சேர்த்துவிட்டால் வெற்றி என்பதுதான் ஆட்டத்தின் நோக்கம். ஆடத் தொடங்கி விட்டால் அவர்கள் பந்தை மட்டும் அடிக்க மாட்டார்கள். ஆளையும்தான், ஆளுக்கு விழுகின்ற அடி மரண அடியாகக்

கூட இருக்கும். ஏன் ஆளை அடித்துக் கொல்லவேண்டும் என்றால், பந்தை ஆடக்கூடிய ஆட்டத்தினரைக் குறைக்கத் தான் என்பதுவே காரணம் அவர்கள் ஆட்டம் ஆடி முடிக்கின்ற லட்சணம், ஆடிய வழியெல்லாம் பிணக்கோலந்தான். மாலைக் காலம் வரும்வரைதான் ஆட்டத்தின் நேரம், அதற்குள் எவ்வளவோ பிணங்கள் மலையாகக் குவியும்.

ஆதிகால செவ்விந்தியர்கள்தான் இப்படி வெறியுடன் விளையாடியிருக்கின்றனரா என்றால், கீர்த்தி மிக்க கிரேக்கத்தில் நடந்த ஒலிம்பிக் பந்தயங்கள் எவ்வாறு நடந்தன? அதில் ஒரு விளையாட்டுப் போட்டி. 'பங்கராசியம்' என்பது அந்தப் போட்டிக்குப் பெயர். பங்கு பெறும் இருவர் குத்துச் சண்டை போடலாம். கடிக்கலாம், குத்தலாம, மிதிக்கலாம், கிள்ளலாம். கொல்லலாம். அதாவது இருவரில் ஒருவர் இறக்கும் வரை அந்தப் போட்டி தொடரும். இத்தனை நிகழ்ச்சியையும் ஆறறிவு படைத்த மக்கள் சுற்றிச் சூழ இருந்து, கைதட்டி மகிழ்ந்து கண்டு ரசித்திருக்கின்றார்கள். அவர்களுக்கிருந்த அந்த வெறிதான் எப்படிப்பட்டது?

அவர்களுக்குப் பின்னே, விளையாட்டுக்களில் அதிக ஆர்வம் காட்டியவர்கள் ரோமானியர்கள். சர்க்கஸ் கூடாரம் போன்ற அமைப்புள்ளதாக, பரந்த மைதானத்தை அமைத்து, அதைச் சுற்றிலும் பார்வையாளர்கள் அமர்ந்து வேடிக்கை பார்க்கும் விதத்தில் இருக்கைகளை அமைத்தனர் காட்டில் திரியும் கொடிய மிருகங்களைக் கொண்டு வந்து அவைகளை பல நாள் பட்டினி போட்டு, ஒன்றை ஒன்று கொன்று தின்னச் செய்து கண்டு களித்தனர்.

சிங்கத்திற்கிடையே யானையையும் மற்ற மிருகங்களையும் விட்டு விளையாட்டைப் பார்த்த மக்களுக்கு அதில் வெறுப்பு ஏற்படவே, பட்டினி கிடக்கும் சிங்கங்களை பரந்த மைதானத்திலே விட்டு, பகை நாட்டில் சிறை பிடித்த வீரர்களை அதிலே தூக்கி யெறிந்து மோதச் செய்து, வேதனைக்

குரலெழுப்பிச் சாகும் மனிதரைக் கண்டு மனம் மகிழ்ந்தனர் மன்னரும் மக்களும்.

அந்த விளையாட்டும் அவர்களுக்கு அலுப்பூட்டியது. ஆகவே, சிறை பிடிக்கப்பட்ட கைதிகளுக்குக் கூர்மையான ஆயுதங்களைக் கொடுத்து, அவர்களிலே இருவரை மட்டும் தேர்ந்தெடுத்துப் போரிடச் செய்தனர், எவனாவது ஒருவன் இறந்தால்தான் போட்டி முடியும். ஒருவரை ஒருவர் வெட்டிக் கொல்வதையும், சித்திரவதை செய்வதையும் பார்த்துச் சிரித்தனர்; பரவசப்பட்டனர்.

இந்த வெறித்தனத்திற்கும் சிகரம் வைத்தது போல ஒரு மன்னன். அவன் பெயர் கிளாடியஸ் என்பது. அவனுக்கு வந்தது இரத்த வெறியா அல்லது பைசாச உணர்வா என்று உணர முடியாத உச்சக் கட்ட கொடிய நிலை. செயற்கையாக சமுத்திரப் போன்ற ஓர் ஏரியை அந்த அரசன் ஏற்படுத்தினான். அதிலே 100 கப்பல்களை நிறுத்தினான். அவற்றில், பகை நாட்டில் பிடித்த 18000 கைதிகளை ஏற்றிக் கொண்டு அவர்களை இரு பிரிவாகப் பிரித்தான். சைகைக்குப் பிறகு அவர்களைச் சண்டைப் போடச் செய்து அவர்கள் சாவதைக் கண்டு மனங்களித்திருக்கின்றான் மன்னன்.

பிறரை விளையாட வைத்து, பொழுது போக்குக்காக அமைந்த விளையாட்டுகளை எல்லாம் மண்ணுண்ட மன்னர்கள் தங்களது போர் வெறியை வெளிப்படுத்துவதற்காகப் பயன்படுத்தினார்கள். காலம் மாற மாற, வேடிக்கை பார்ப்போரிலிருந்து விளையாடுவோர்க்கே வெறித்தனம் ஏறிக் கொண்டு வந்திருக்கிறது.

'கர்லி' என்றொரு ஆட்டம்; சில நூற்றாண்டுகளுக்கு முன்னே அயர்லாந்திலே மிக விமரிசையாக விளையாடப் பெற்ற ஓர் தேசிய ஆட்டம், ஹொகோல் பந்தாட்டம் போன்றதொரு விதி அமைப்புடன் கையிலே ஒரு

களைந்த தடியுடன்தான் அந்த ஆட்டத்தை ஆடுவார்கள். பத்தாயிரம் பேர்களுக்கு மேல் அந்த ஆட்டத்தை காணப் பார்வையாளர்கள் பரபரப்புடன் கூடியிருக்கின்றனர். வெற்றி பெற வேண்டும் என்ற வேகத்துடன், ஆவேசத்துடன் இரு குழுவினரும் ஆடினர். எப்படி ஆடினாலும் ஏதாவது ஒரு குழுதானே வெற்றி பெற முடியும்? வெற்றி பெற்ற இருவரில் ஒரு குழுவினர் என்ன செய்தார்கள் தெரியுமா? வெற்றி தந்த வேகத்தின் விளைவால், வந்த வெறித்தனத்தால், எதிராளியாக ஆடிய ஒன்பது ஆட்டக் காரர்களையும் தடியால் அடித்தே கொன்றுவிட்டனர். பார்த்தவர்களும் பேசவில்லை.

செவ்விந்தியர்கள் காட்டுமிராண்டிகள்தான் என்றாலும் ஆள் கூட்டத்தை ஆட்டத்தில் குறைப்பதற்காக எதிராட்டக் காரர்களை அடித்துக் கொன்றார்கள். நாகரீகம் நிறைந்த அயர்லாந்து ஆட்டத்தில், ஆட்ட முடிவுக்குப் பிறகுங்கூட ஆட்டக்காரர்களை அடித்தே கொன்றிருக்கின்றனர். ஏன் இந்த வெறித்தனமோ தெரியவில்லை.

காலம் கனிந்து கனிந்து மாறிக்கொண்டுதானிருக்கிறது. கருத்தை அது கனிய வைப்பதாகத் தெரியவில்லை. ஆமாம். ஆட்டக்காரர்களிடையே இருக்கும் ஆவேசத்தை ஆறறிவுப் பண்பு அடக்க முடியவில்லையே! மேல் நாடுகளிலே விளை யாட்டுப் போட்டிகளுக்கு நடுவராகப் பணியாற்றுகின்ற வர்கள், தற்காப்புக்காக கைத் துப்பாக்கிகளை வைத்துக் கொள்கின்ற அளவுக்கு, வன்முறையும் வெறித்தனமும் ஆட்டக்காரர்களிடையே மிகுந்திருக்கிறது. ஆடுகளத்திற் குள்ளேயே நடுவர்கள் மட்டைகளாலும், கோல்களாலும் ஆட்டக்காரர்களால் அடித்துக் கொல்லப்பட்ட செய்திகள் அடிக்கடி செய்தித் தாள்களில் எத்தனையோ வந்திருக் கின்றன.

"யார் வெற்றிபெற்றார்கள் என்பது விளையாட்டின் நோக்கமல்ல. விளையாட்டுக்கும் முக்கியமல்ல. யார் எப்படி விளையாடினார்கள்" என்பதையே வரலாற்று ஆசிரியர்கள்

தங்கள் வரலாற்றுக் குறிப்பில்எழுதுவார்கள் என்பதுதான். நாடறிந்த உண்மை. இந்த உண்மையை இன்று யார் மதிக்கிருர்கள்? "வெற்றிக்காகத்தான் விளையாடுகிருேம், வெற்றியால் வருகின்ற புகழுக்காகத்தான் விளையாட்டு வீரர்களை அனுப்புகிருேம்" என்று எல்லா நாடுகளுமே போட்டி போடத் தொடங்கிவிட்டன. இல்லை என்ருல் இப்பொழுதெல்லாம் நடக்கின்ற விளையாட்டுப் போட்டிகளில் வெறித்தனமும் விவேகமற்ற செயல்களும் தொடர்ந்து நடக்குமா? நடந்து முடிந்த ஒலிம்பிக் பந்தயங்களைத்தான் நாம் பார்த்தோமே! கூடைப் பந்தாட்டத்தில் வெற்றி நாடாக இருந்து வந்த அமெரிக்கா.இந்த ஒலிம்பிக்கில் ரஷ்யாவிடம் தோற்றது. கைப்பந்தாட்டத்தில் இதுவரை வெற்றி நாடாகயிருந்து வந்த ரஷ்யா ஜப்பானிடம் தோற்றது கால் பந்தாட்டத்தில் இதுவரை வெற்றி நாடாக இருந்து வந்த ஹாலந்து ருமேனியாவிடம் தோற்றது. வளைகோல் பந்தாட்டத்தில் வெற்றி நாடாக இருந்த இந்தியாவும் பாகிஸ்தானும் மேற்கு ஜெர்மனியிடம் தோற்றன.

எத்தனை நாடுகள் தங்கள் தோல்வியை ஒப்புக் கொண்டன? எத்தனை நாடுகள் எதிர்க்குழுவினரின் விளையாட்டுத் திறனை விவேகமுடன் போற்றிப் புகழ்ந்தன? அத்தனை நாடுகளுமே நடுவரை இகழ்ந்தன. எதிர்க் குழுவினரை இகழ்ந்தன. அதற்கு முத்தாய்ப்பு வைப்பது போல பாகிஸ்தான் குழு' ஒலிம்பிக் பந்தயப் பதக்கங்களையும், குழுவினரையும் இழிவு படுத்திய இழி நிலையைத்தான் நாம் பத்திரிக்கைகளில் படித்தோமே!

'பிறரை வேதனைபடுத்துவதற்காக விளையாடக்கூடாது தங்கள் மகிழ்ச்சிக்காகவே விளையாட்டு' என்பதை வீரர்கள் உணரவேண்டும். 'கலை கலைக்காகவே' என்பதுபோல 'விளையாட்டு என்பது விளையாட்டுக்காகவே' என்பதை உணர்ந்து விளையாடி வாருங்கள். விளையாடி மகிழுங்கள். வலிவான உடலுடன் திகழுங்கள். வாழ்க்கையின் நோக்கமும் இதுதானே!

# 5. விளையாட்டுக் கொடுமைகள்

"பணக்காரனைச் சுற்றி பத்துப்பேர்; பைத்தியக்காரனைச் சுற்றி பத்துப் பேர்" என்று பழமொழி கூறுவார்கள். மேலை நாட்டுப் பணக்காரர்களுக்கு இது சாலவும் பொருந்தும். பொழுது போகவில்லையே என்று அவர்கள் செய்த பைத்தியக் காரத்தன மெல்லாம், விளையாட்டுக்கள் என்ற பெயரில் எத்தனை எத்தனைக் கொடுமைகளை இழைத்திருக்கின்றன.

இதயமே இல்லாதவர்கள் போலும், இரக்கமே கொள்ளாதவர்கள் போலவும், அவர்கள் பொல்லாத கொடுமையிலே குளித்தெழுந்து களித்து மகிழ்ந்திருக்கின்றனர் என்று வரலாறு வடித்துக் காட்டும்போது, அவர்களைப் பார்த்து வியப்பதா வெறுப்பதா என்ற இக்கட்டான சூழ்நிலையே நமக்குத் தோன்றுகிறது.

ஆதிவாசிகள்தான் அறிவு வளர்ச்சியில்லாமல் அரக்கத் தனமாக வாழ்ந்திருக்கின்றார்கள் என்றால், ஆறறிவு படைத்தவர்கள், அனுபவத்தில் லயித்தவர்கள் ஏன் இப்படி நடந்து

கொண்டிருக்கிறார்கள் என்றால், இந்த கேள்விக்குக் காலந்தான் விடை சொல்லும். மிருகங்களை வேட்டையாடி உண்ட நாட்கள் உண்டு. பிறகு வேடிக்கைக்காகக் கொன்ற நாட்கள் உண்டு. ஆனால் அந்த மிருகங்களை வைத்து எப்படி எப்படியெல்லாம் விளையாண்டிருக்கிறார்கள் அவர்கள் ?

தமிழகத்தில ஆண்மகனைக் 'காளை' யென்று அழைப்பது மரபு. ஒரு பெண்ணோடு அந்த இல்லத்தில் வளர்கின்ற காளையினை, அந்தப் பெண்ணை மணக்க விரும்பும் வாலிபன் அடக்கிவிட்டால்தான் திருமணம் நடக்கும். அவ்வாறு காளையினை அடக்கும் வலிமையைப் பெற்றிருந்தால்தான் அக்கால ஆண்மகன் காளை எனப்பெயர் பெற்றான். ஆனால் வாழ்வா சாவா என்று வதைத்த நிகழ்ச்சிகளுக்கு வரலாறு இல்லை. இதை வீர விளையாட்டு என்று இலக்கியம் போற்றிப் பரவும். இனிவரும் விளையாட்டுக்களைப் பற்றி படித்த பிறகு நீங்களே ஒரு முடிவுக்கு வாருங்கள்.

பாய்ந்தோடும் நீரோடையின் இருபக்கத்திலும் உள்ள மரத்தை இணைப்பது போல ஒரு கயிற்றைக் கட்டி வைத்திருப்பார்கள். ஆற்றின் நடுவே இருப்பது போல ஒரு பறவையைத் தலைகீழாகக் கட்டி கயிற்றில் தொங்கவிட்டிருப்பார்கள். இனி விளையாட்டு தொடங்கிவிடும். வேகமாக வரும ஆற்றின் வெள்ளத்தோடு, படகு ஒன்று பாய்ந்து வரும். படகை இன்னும பலர் செலுத்திக்கொண்டிருப்பார்கள். விளையாட்டில் கலந்து கொள்ளும மனிதன் தயராக படகின் மத்தியில நின்றுக்கொண்டிருப்பான். பறவை இருக்குமிடம் வந்ததும், பாய்ந்து பறவையைப் பிடித்து, படகு அந்தப் பறவையைக் கடப்பதற்குள், பறவையின் தலையைப் பிய்த்தெறிந்து விடவேண்டிய விதியின்படி, அவன் பறவையின் தலையைத்திருகிட முயற்சிப்பான். தலையைத் திருகி எடுப்பதில் அவன் வெற்றி பெற்றால் அவன் வீரனாகி விடுகின்றான்

பறவையே அவனுக்குப் பரிசாகக் கிடைத்துவிடும். அந்த விளையாட்டில் தோற்றால் அந்தப் படகில் உள்ளவர்கள், அங்கிருந்தே அவனைத் தண்ணீரில் தூக்கியெறிந்து விடுவார்கள். இப்படி ஒரு கழுத்தறுக்கும் விளையாட்டு.

ஒவ்வொரு ஆளுக்கும் ஒவ்வொரு பறவை என்று கொன்று விளையாடிய இந்த இரத்த வெறி பிடித்த விளையாட்டை, இன்னும் கொஞ்சம் மாற்றி ஆடினார்கள் அமெரிக்க மக்கள். டச்சு நாட்டிலே இருந்து வந்த ஆட்டம் வெகு விமரிசையாக இங்கு வரவேற்கப்பட்டது, ஆற்றைத் தேடிக் கொண்டு அடிக்கடி போகவேண்டும் என்பதற்காகவோ என்னவோ, அவர்கள் மரத்தை நம்பத் தொடங்கி விட்டார்கள். ஆற்றின் நடுவே கட்டிய பறவையை மாற்றி ஒரு மரத்தின் கிளையில் தலைகீழாக கட்டித் தொங்க விட்டிருப்பார்கள், படகுக்குப் பதிலாக, குதிரை மீதேறி ஒரு கொம்பன் தலையைக் கொய்ய வருவான். வருகின்ற வேகத்திலேயே அந்த இடத்தைக் கடப்பதற்குள் பறவையின் தலையைப் பிய்க்க வேண்டியதுதான் ஆட்டம். முயற்சி செய்யும் பொழுது, பறவையின் கழுத்து முறிந்தாலும் முறியும். சமயத்தில் குதிரை வீரனின் இடுப்பு ஒடிந்தாலும் ஒடியும். ஆமாம், தலைகிடைத்தால் பறவை அவனுக்கு கொலைசெய்ய முடியாமல் போனால் குதிரையிலிருந்து கீழே விழுந்த தண்டனை அவனுக்கு, இதைப்பார்க்க ஏராளமான கூட்டம். எப்படியும் கைதட்டி மகிழ கூட்டத்திற்கு வாய்ப்புண்டே.

பொழுது போக்குவதற்காகக் கழுத்து நீளமுள்ள பறவைகள், கிடைக்கவில்லையோ என்னவோ தெரியவில்லை. அந்த ஆட்டத்தின் சுவை குறைந்தது. அவர்களின் நோக்கம் வான் கோழியை நோக்கிப் பாய்ந்தது. கான மயிலாடக் கண்டிருந்த வான் கோழி தானும் அதுவாய் பாவித்து, தன் பொல்லாச் சிறகை விரித்து ஆடத் தொடங்கியதாகத்தான் நாம் படித்திருக்கிறோம். ஓடியதாக நமக்குத் தெரியவில்லை. அமெரிக்க மக்கள் வான் கோழிகளைப் பிடித்து ஓட ஓட விரட்டியிருக்

கிறார்கள். ஆமாம். வான் கோழிகளுக்கு ஓட்டப் பந்தயம் விட்டு, பந்தயம் கட்டி விளையாடியிருக்கின்றனர். அவர்கள் கொடுத்த அடிக்கும் இடிக்கும்பயந்து அவைகள் ஓடித் தொலைந்தன. நம்மவர்கள் இப்பொழுது குதிரைமேல் பணத்தைக்கட்டித் தொலைப்பது போல, அந்நாட்டுப் பணக்காரர்கள் ஆயிரம் ஆயிரமாக ரூபாய்களை வான் கோழிப் பந்தயத்தில் விட்டிருக்கின்றனர்.

நாம் ஆடவிட்டுப் பார்த்தோம். அவர்கள் ஓடவிட்டுப் பார்த்தார்கள். அதோடு விட்டுவிடவில்லை, சாராயக்கடைகள் தோறும் இந்த சரித்திரக் குறிப்பு பெற்ற வேடிக்கை விளையாட்டை ஆடி அனுபவித்தார்கள். அந்த பறவையை அழிக்கத் தொடங்குவது போல இன்னும் ஒரு புது விளையாட்டைக் கண்டு பிடித்து விளையாடத் தொடங்கினர்.

100 கெஜ தூரத்திற்கு அப்பால் வான்கோழியை நிறுத்தி வைத்துத் துப்பாக்கியால் சுட்டுத் தங்கள் குறிபார்த்து சுடும் வெறியைத் தீர்த்துக் கொண்டார்கள். சுட வந்தவன் அதற்கென்று ஆயிரமாயிரம் ரூபாய்களை பந்தயமாகக் கட்டி விட்டு சுடத் தொடங்குவான். பறவையைச் சுட்டு விட்டால் பரிசு அந்த வான் கோழியே! தோற்றால் கட்டிய பணமெல்லாம் தொலைந்ததுதான்.

வான்கோழி மட்டுமா வதைபட்டது! கோழிகளுங் கூடத்தான். ஏழைகளின் பொழுது போக்காக இருந்த இந்தக் கோழிச் சண்டைக்கு, அகில உலகக்கு கோழிச் சண்டை கழகமே ஆரம்பிக்கின்ற அளவுக்குப் பெரும் புகழும் பெருகியது. கொழு கொழுவென்று, கோழிகளை வளர்த்துக் கொண்டு அதன் கால்களிலே கத்திகளைக் கட்டி விட்டு சண்டை போட்டுக் கொள்ளச் செய்தனர். எந்தக் கோழி ஜெயிக்கும் என்று கூட பணத்தைப் பந்தயம் கட்டாமல், எந்தக் கோழிக்கு முதலில் இரத்தக்காயம் ஏற்படும் என்பண

வற்றிற்கெல்லாம் சுற்றி நின்றுகொண்டு பந்தயங்கட்டி சூதாட்டம் போல் ஆடினர்.

1650ஆம் ஆண்டு இங்கிலாந்தில் தொடங்கப்பெற்ற இந்தக் கொடுமைக்கு, செய்தித் தாள்கள் எல்லாம் வானளாவிய விளம்பரம் தந்தன. அவை பணக்காரர்களைக் கூட்டின, அறுபட்ட கோழி துடிப்பதைக் கண்டு ஆனந்தம் கண்டனர் அவர்கள்.

கோழி மட்டுமா கொடுமைப்பட்டது? நாய்களும் தான். நாய்களைச் செல்லப் பிள்ளையாகத் தத்தெடுத்துக் கொண்டது போல, மார்பிலும் மடியிலும் வைத்துக் கொண்டு கொஞ்சி, சத்தமாக முத்தமிட்டுக் களிக்கும் பெண்மணிகளை இன்னும் நாம் அன்றாட வாழ்க்கையில் சந்திக்கிறோம். இந்த வேடிக்கையும் விநோதமும் அன்றே நிகழ்ந்துதான் இருக்கின்றது. பணக்கார ஆண்கள் மட்டுந்தான், இத்தகைய பைத்தியக்கார விளையாட்டுக்களில் ஈடுபட்டனரா என்றால், இந்த நாய் விவகாரத்திற்குப் பிறகு. பெண்களும் முழு மூச்சாக பங்கு பெறத் தொடங்கினர். 1870ம் ஆண்டிற்குப் பிறகு நாய்ப் பந்தயத்தையும் தொடங்கி விட்டனர். கண்காட்சியாக அல்ல; நாயின் ஓட்டப்பந்தயமாகத்தான்.

நல்ல ஜாதி நாய்களைத் தேர்ந்தெடுத்து, நன்றாக வளர்த்து, அவைகளை ஓட்டப் பந்தயத்திற்குத் தயார் செய்த பெண்ணழகிகள், வீதிகளின் இரு புறமும் மொய்த்து நின்று நாய்களை ஓடவிட்டும். ஓட்டியும், ஓட்டப் பந்தயங்களை நடத்தி இன்பம் கண்டனர். பெண்களின் நெஞ்சம் நாய்களின் ஓட்டத்தைப் பார்த்து மகிழ்ந்தது என்றால், ஆண்கள் அவ்வாறு மகிழ முடியுமா? அவர்கள், அதற்குமேல் ஒரு படி சென்றுதானே அனுபவிக்க முடியும்? ஆமாம்! ஆண்மை மிகுந்தவர்கள் அல்லவா அவர்கள். அவர்கள் செயலில் ஆண்மை குடிகொண்டிருக்க வேண்டாமா? அவர்களும்

நாய்களை வளர்த்தார்கள். மடிமீது வைத்துக் கொஞ்சவ வீதிகளில் வெள்ளோட்டம் விடவா? அல்லவே அல்ல? வெறித்தனமான தங்கள் விளையாட்டுக் கொடுமைக்கு விருந்து வைக்கத்தான்.

கூண்டு ஒன்று செய்யப்பட்டிருக்கும்-பணத்தை ஆண்டு கொண்டிருக்கும் 'பண்பாளர்கள்' எல்லாம் கூடி, சுற்றிலும் அமர்ந்து வேடிக்கை பார்த்து மகிழ்வதற்காக இருக்கைகள் கூண்டைச் சுற்றி அமைக்கப்பட்டிருக்கும். கூண்டிற்குள்ளே கரடி ஒன்றைக் கட்டவிழ்த்து விட்டு வேட்டை நாய்கள், ஐந்து அல்லது ஆறை அவிழ்த்து உள்ளே விட்டு விளையாட்டுக் காட்சியை தொடங்கி விடுவார்கள். அந்த ஆட்டம்—ஒன்று கரடி நாய்களால் கடிப்பட்டு இறக்கும் வரை தொடரும். அல்லது கரடியால் அறையப்பட்டு நாய்கள் குற்றுயிராய் கீழே கிடந்து மிதிபடும் வரைவளரும். வேடிக்கை பார்ப்போர் விண்ணதிரக் கூச்சலிட்டுத் தங்கள் ரசிகத் தன்மைக்கு இரை தேடி விழுங்கி மகிழ்ந்தனர். கரடி கிடைக் காத நேரங்களில் காளை மாடுகளும், இந்த போராட்டத்தில் விடப்பட்டன. எப்படி இருந்தாலும் மக்களுக்கு வேண்டியது மகிழ்ச்சிதானே.

கரடியிடம் அறைபடவும் காளையிடம் மிதிபடவும் போன்ற வாய்ப்புக்களைப் பெற்ற நாய்களுக்கு. இன்னும் சில சமயங் களில் வேறு வகையான விருந்தும் கிடைத்தது, ஆமாம். முன்னே விவரித்த விளையாட்டுக் கொடுமைகளுக்கு விறு விறுப்பும் பரபரப்பும் குறையும் வேளைகளில் வேறு ஒரு மாற்று விளையாட்டு வேண்டுமல்லவா? அதிகமான எண்ணிக்கையில் எலிகளைப் பிடித்து வைத்து வளர்த்துக் கொண்டிருப்பார்கள் முதலில். நன்முக எலிகள் வளர்ந்த பிறகு விளையாட்டுத் துன்பம் தொடங்கிவிடும்.

எந்த விளையாட்டுக்கும் பந்தயம் தான் முக்கியம். ஆகவே பந்தயம் கட்டுபவர்கள் அமர்ந்து இருப்பதற்காக

ஆசனங்கள் அமைக்க வேண்டும். ஆனால் இந்த விளையாட்டுக்கு இருக்கைகள் முக்கியமல்ல. ஒரு ஆழமான தொட்டி அல்லது பள்ளமுள்ள பகுதியாக, விளையாட்டுக்கென்று இடத்தைத் தேர்ந்தெடுப்பார்கள். அதனுள்ளே எல்லா எலிகளையும் விட்டுவிடுவார்கள் அத்துடன் ஒரு நாயையும் உள்ளே போட்டுவிடுவார்கள். எலிகள் ஜெயிக்கின்றனவா, நாய் ஜெயிக்குமா என்ற பிரச்சனையே அங்கு இல்லை.

நிச்சயம் எலிகள் தோற்றுத்தான் அழியும். ஆனால் அந்த விளையாட்டு வெறியர்களுடைய நோக்கம் என்ன வென்றால், எவ்வளவு நேரத்திற்குள் எத்தனை எலிகளை இந்த நாய் தின்னும்? இந்த நேரக் கணக்கிற்காகப் பந்தயங்களைக் கட்டிப் பணக்காரர்கள் மகிழ்வார்கள். எலிகளுக்குத் திண்டாட்டம், பணக்காரர்களுக்குக் கொண்டாட்டம். சில சமயங்களில் நாய்களுக்குப் பதிலாக கீரியினத்தைச் சேர்ந்த பிராணியும் கீரியும்கூட அந்த பந்தயங்களில் பங்கு பெற்றன.

இவ்வாறு கைக் கெட்டுகின்ற அளவிலே கிடைக்கும் வீட்டு மிருகங்களை வைத்து, இரத்த வெறியுடன் விளையாடி மக்கள் மகிழ்ந்தனர். இதைப் பார்த்த மன்னர்களுக்கு எதுவும் தோன்றுதா என்ன? தோன்றியதே!

பெரிய சர்க்கஸ் கூடாரம் போன்ற அரங்கம் ஒன்றைக் கட்டி, அதற்குள்ளே சிங்கத்தையும் காட்டு மிருகங்களையும் மோதவிட்டு, அவைகள் ஒன்றுக்கொன்று உயிருக்காகப் போராடித் தவிப்பதிலே உள்ள மோதலைக் கண்டு முதலில் மகிழ்ந்தனர்.

ரோமானியர்கள் தொடங்கி வைத்த இந்த துரதிருஷ்டமான விளையாட்டுக் கொடுமையே பசித்த சிங்கத்திடம் போர்க் கைதிகளைத் தூக்கிப் போடச் செய்தது, சிங்கத்தோடு அந்த அடிமைகள் சிக்கித் தவித்து மிருகத்தின் வயிற்றில்

அவர்கள் உடல் சங்கமமாகும் வரை போராட்டம் வளர்ந்தது.

மிருகங்களும் மனிதர்களும் போராடியக் காட்சி அவர்களுக்கு அலுத்துவிட்டது போலும். பயங்கர ஆயுதங்களைக் கைகளிலே கொடுத்து இரண்டு அடிமைகளை பொருதிக் கொள்ளச் செய்தனர். போட்டியின் முடிவு யாராவது ஒருவர் உயிரோடு திரும்ப வேண்டும் என்பதே. இருவரும் இறந்துபோனாலும் அவர்களுக்குக் கவலையில்லை. இரட்டிப்பு மகிழ்ச்சியே. இருவரும் இறக்காவிட்டால்? என்ற எண்ணம் உங்களுக்கு வந்தால், அதற்கும் ஒரு வழி இருந்தது. ஆமாம். வேடிக்கை பார்ப்பவர்களே அவர்களைக் கத்தியாலோ வேறு வேல்களாலோ வீசிக் கொன்று குவிப்பார்கள்.

இதிலும் இதயம் திருப்தி அடையாத இனந்தான் மனித இனம். விலங்குகளின் விலா எலும்புகளை ஒடித்து, வீழ்த்தி, இரத்தம் பெருக்கியே குளித்துக் களித்தும் கொடுமை மிகுந்த இந்த விளையாட்டுக்கள் குறையவே இல்லை.

கத்திச் சண்டை ஒன்று கண்டுபிடித்து, போரிட்டுப் புண்படுத்தி மகிழ்ந்தனர். அதையும் மாற்றி, கைகளாலேயே ஒருவரை ஒருவர் குத்திக்கொண்டு ஆடும் புதுப் போட்டி ஒன்றைப் புகுத்தி இன்பம் கண்டனர். பிறகு வேடிக்கை என்று எண்ணியோ என்னவோ. பலப் போட்டி என்று ஒன்றைத் தொடர்ந்தனர்.

இருவரை மேடைமேல் ஏற்றிவிட்டுக் குத்துச் சண்டை என்றார்கள். இருவரும் வெறும் கைகளால் முகத்தில் குத்திக் கொள்ளலாம். மூக்கைக் கடிக்கலாம். நகத்தால் விழியைப் பிடுங்கலாம். பிராண்டலாம். முட்டியால் உதைக்கலாம். மயிரை இழுக்கலாம். மிதிக்கலாம். இப்படியெல்லாம் சண்டை போடலாம் என்றால் போராட வந்திருப்போர் பயந்து வெளியேறி விட்டால் என்ன ஆவார்கள்? மேடையே ரணகளமாகிவிடும் வேடிக்கை பார்ப்போருக்கு வேட்டை தானே! பிறர் துன்பமே அவர்களுக்கு இன்பம்.

இவ்வாறு, காலங்காலமாக விளையாட்டுக்கள் நடை பெற்றிருக்கின்றன. இவைகளை வீர விளையாட்டுக்கள் என்பதா? கோர விளையாட்டுக்கள் என்பதா? அறிவின் வளர்ச்சி என்பதா? அரக்க மனத்தின் கிளர்ச்சி என்பதா?

இரத்தவெறி பிடித்தலையும் உணர்ச்சிகளுக்கு இரை தந்த விளையாட்டுக்கள் எல்லாம், கொஞ்சங் கொஞ்சமாகக் குறையத் தொடங்கின.

கொடுமை குறைந்து மனிதத் தன்மை குலவ வேண்டும் என்பதற்காக, விளையாட்டுக்களிலே வழிகளைப் புகுத்தினர், திருத்தினர்.

எவ்வாறோ, அகிலத்தை ஆட்டிப் படைக்கும் சக்தி மனிதர்களையும் ஆண்டது. அதிலிருந்து அறிவின் பாதை மீண்டது. 'விளையாட்டுக்கள் மனித இனத்தின் வழிகாட்டி. அமைதி காக்கும் அன்புப் படகோட்டி' என்ற நிலைக்கு மனிதப் பண்பாடு உணர்ந்து கொண்டது. விதிகளும் முறை களும் விளையாட்டுக்களை ஆள, கொடுமைகள் கூண்டோடு மறைந்தன என்று நம்புகிறோம். நடைமுறைகள் இதை நமக்கு நன்கு காட்டவில்லையா?

# 6. விளையாட்டுக் கலையும் நடுவர்கள் நிலையும்

பொழுது போக்கவும், புத்துணர்ச்சி பெறவும் கூடியுள்ள பார்வையாளர்கள், வீரமும் விவேகமும் நிறைந்த விளையாட்டு வீரர்கள்; தங்கள் குழுவினரைக் களத்தில் செல்ல விட்டு விட்டு, குறுகுறுக்கும் நெஞ்சுடனும் படபடக்கும் விழிகளுடனும் வெளியிலே வீற்றிருக்கும் குழுமேலாளர்கள்; அங்குமிங்கும் அலைந்த வண்ணம் ஆக வேண்டியவைகளைக் கவனிக்கும் ஆட்ட அதிகாரிகள் ...

அத்தனை பேரையும் 'வருக வருக' என்று அழைப்பது போல, ஆடுகளத்தின் நான்குபுறமும் நிற்கும் கொடிகள் தலையாட்டி வரவேற்று, மைதானத்திற்குக் களை கூட்டி நிற்கின்றன. அலைமோதும் வழிக் கூட்டத்திற்கிடையே ஆட்டக்காரர்கள் வருகின்றனர். குழுவுக்கு ஏற்றதோர் கவர்ச்சியான வண்ண வண்ண உடைகள் அவர்களை அலங்கரித்துக் காட்டுகின்றன.

அவர்களுக்கிடையே ஒருவர் கருஞ்சட்டை யணிந்து கொண்டு நிற்கிறார். ஆயிரமாயிரம் கண்கள் அவரையே மொய்த்து நிற்கின்றன, சுழல்கின்றன.

சமன் செய்து சீர்தூக்கும் கோலாக, காய்தல் உவத்தல் அகற்றி ஆய்ந்தறியும் அறிஞராக, மெய்வருத்தம் பாராது ஆட்டத்தை நடத்துதற்கும், நல்ல முறையில் கட்டுப்படுத்து தற்கும் அதிகார பூர்வமான உரிமை பெற்றுக் கடமையுடன் நிற்கின்ற அவர்தான் நடுவராவார்.

விசில் ஒலிக்கிறது. விளையாட்டு வீரர்களிடையே பந்து உதை பட்டு பறக்கிறது. பார்வையாளர்கள் பக்கமோ பல்வேறு பேரொலி சந்தைக்கடையாக வலுக்கிறது. விளையாட்டு வீரர்களைப் போலவே ஓடிக்கொண்டேயிருக்கிறார் நடுவர். நிற்கிறார்—நடக்கிறார்—பந்தோடு கண்களை சுழல விட்டுக் கொண்டே இருபுறமும் மாறிமாறி ஓடுகிறார். இதோ! பந்து ஒரு இலக்கினுள் நுழைந்துவிடுகிறது. அவரது விசில், நீண்ட ஒலி எழுப்பி நிற்கிறது.

வாய்ப்புக் கிடைத்து, பந்தை இலக்கினுள் உதைத்தக் குழுவினர் வாயாரச் சிரித்து, ஒருவரை ஒருவர் தழுவிக் கொள்கின்றனர். வாய்ப்பினை இழந்தவர்களின் நிலையை உங்கள் கற்பனைக்கு விட்டுவிடுகிறேன்.

ஆட்டம் தொடர்ந்து இத்துடன் சுமுகமாகச் செல்வதில்லை. பலரால் செல்ல விடுவதற்கோ முடியவில்லை. அங்கு சிலபல சூழ்நிலைகள் சிக்கலாகி, வெடித்தெழுகின்றன. துடித்தெழுகின்றன. (சில சமயங்களில்தான்)

தங்கள் தோல்விக்குரிய காரணங்களை ஆராய்வதற்குத் தோற்றவர்களோ அல்லது அவர்களின் சார்பாளர்களோ, முயல்வதில்லை. நடுவரின் கவனக்குறைவு என்பார் சிலர். அடுத்த குழுவை அவர் மறைமுகமாக ஆதரித்து விட்டார் என்பார் சிலர். அவருக்கு ஆட்டத்திற்குரிய விதிகளே

தெரியவில்லை என்று முட்டாள் பட்டம் கட்டுவதில் முனைவபர்கள் சிலர். ஒரே இடத்தில் ஓடாமல் நின்றால் எப்படித் தவறுகள் தெரியும் என்றும், நடுவர் பணம் வாங்கிக் கொண்டு குழிபறித்துவிட்டார் என்று பழிமேல் பழிகளைப் பொழிந்துகொண்டே போவாரும் உண்டு.

இத்தனைப் பேச்சுக்கும் ஏச்சுக்குமிடையில், மைதானத்திற்குள்ளே புகுந்து விடுகின்ற ரசிகர்கள்; நடுவர்களைத் தாக்கத் துடிக்கின்ற ஆட்டக்காரர்கள் எதிர்ப்பு மனுவைத் தரத்துடிக்கும் குழுமேலாளர்கள் எல்லாருமே விளையாட்டை வலுக்கட்டாயமாக வெறியாட்டத்திற்கே இட்டுச் சென்றுவிடுகின்றனர். என்ன செய்வது ?

பொறுப்புடனும் பொறுமையுடனும் பணியாற்றும் நடுவர்களின் நிலையைப் புரிந்து கொள்ளாமல், ஊரெங்கும் உலகமெங்கும் நடந்து கொண்டிருக்கும் நிகழ்ச்சிகளைக் கேட்கும் பொழுதோ, நெஞ்சுநெகிழ்ந்துதான் போகின்றது. ஆட்டத்தைக் கண்காணிக்கின்ற பொழுது அடிபட்ட நடுவர்கள் உண்டு. மிதிபட்டவர்கள், வெறி நாய்கடளிம் சிக்கிய முயலைப் போல விரட்டப்பட்டவர்கள், பாதுகாப்பன அறை நோக்கிப் புதுப்புனலாக பாய்ந்தோடி தப்பியவர்கள், போலீசாரின் காவலுடன். போலீஸ் வண்டியிலேயே தமது வீட்டுக்குப் பயணம் செய்தவர்கள் உண்டு.

இவ்வாறெல்லாம் மற்றவர்கள் மத்தியிலே வேதனைப் படவும், அவமானப்படவும் நடுவர்கள் ஏன் வரவேண்டும் ? வேறு வேலையே அவர்களுக்கு இல்லையா ? இதனை எண்ணிப் பார்ப்பவர்கள் இருந்தால், மேலே கூறிய வேதனை மிகுந்த நிகழ்ச்சிகளும் இழிவான சூழ் நிலைகளும் உருவாகியே இருக்காது.

பந்தாட்டத்தைக் கட்டுப்படுத்த வந்திருப்பவரே பந்தாடப்படுகிறார் என்றாலும், சில சமயங்களில் தமது உயிரையே இழக்கின்ற தருணமும் நிகழ்ந்து விடுகின்றன.

என்றாலும், ஏன் நடுவர்களாக அவர்கள் வருகின்றார்கள் என்பதையும் நாம் சிந்தித்துப் பார்க்கவேண்டும்.

நடுவர்களாகப் பணியாற்ற வருகின்றவர்கள் எல்லாம், நல்லதோர் மாறாத அன்பால், மறையாத நேசத்தால், இருக்கின்ற தமது சொந்த அலுவல்கள் அத்தனையையும் விட்டுவிட்டுத்தான், இந்தப் பணியாற்ற வருகின்றார்கள்.

''பழி தம்மீது சுமத்தப்படும்: பாராட்டோ எப்படியும் கிடைக்காது'' என்று தெரிந்துதான் வருகின்றார்கள் என்றால், விளையாட்டின் மீது அவர்கள் கொண்டிருக்கும் விருப்பத்தால் தான் என்பதையும் நாம் முதலில் புரிந்து கொள்ளவேண்டும்.

'வருமானம் அவர்களுக்கு வருகிறதே' என்று வாய் கிழியக் கேட்பவர்களும் இருக்கின்றார்கள். வருமானத்தை விட வருவதும் பெறுவதும எல்லாம் அவமானமே தவிர, வேறல்ல. ஏதோ ஆறு அல்லது ஏழு ரூபாய் அவர்களுக்குக் கிடைக்கிறது என்றால், அது அவர்களின் பணிக்காகக் கிடைக்கும் கூலியல்ல. ''விலைமதிக்க முடியாத அவரது பணியை மதிக்கிறோம். துதிக்கிறோம்'' என்று ஆட்டத்தை நடத்துவோர் காட்டும் அன்புக்கும் நன்றிக்கும் அடையாளமே தவிர, அது கூலியோ சம்பளமோ அல்ல.

அவரது தூய தொண்டிற்கு விலையே கிடையாது என்றால், வெறும் வருமானம் கருதியா இந்த வேலைக்கு வருகின்றார்கள் ?... இல்லை... இல்லவே இல்லை

நடுவர்களின் பணி அவ்வளவு எளிதில் கிடைத்துவிடும் வேலையல்ல. அதைப் பெறுவதற்குள் அவர்கள் எவ்வளவு சோதனைகளையும் தேர்வுகளையும் தாங்கிக் கொள்ளவேண்டும் என்பதையும் அறிந்து கொள்ள வேண்டும்.

பந்தாட்ட விதிகள் அத்தனையையும் பரிபூரணமாகத் தெரிந்து வைத்திருக்க வேண்டும். தேர்விலே தெளிவாக

விடை எழுதி வெற்றி பெற்ருலும், வாய்மூலமாகக் கேட்கப் படும் கேள்விகள் அனைத்துக்கும் வழவழா என்று இல்லாமல் உடனுக்குடன் தெளிவாகக் கூறியும், கேட்பவர்களுக்கு மனத் தெளிவினை உண்டாக்கும் திறனும் வேண்டும் நிறக்குருடு இல்லாத கண்ணேட்டம் உள்ளவர்களாகவும் இருக்க வேண்டும்.

இத்தனையிலும் வெற்றிபெற்று வந்துவிட்டால்மட்டும் சிறந்த நடுவராகப் புகழ் பெற்றுவிட முடியுமா? மனிதர் களுடைய குணுதிசயங்களையும் அவர்களது குண நலங்கள், உளப்பாங்கு பற்றியும் அறிந்து வைத்து, அவர்கள் ஆடுகின்ற நேரங்களில் பெறுகின்ற உணர்ச்சிகளுக்கு ஏற்ப நெளிந்து கொடுக்கும் தலைமைப் பண்பாளராகவும், உடல் திறம் கொண்டவர்களாகவும் விளங்கவேண்டும்!

இவ்வாறு, சிறப்பான பதவிகளிலும், பொறுப்பான கடமைகளிலும் சிறந்து விளங்கும் ஆற்றல்களிலும் தர முள்ளவர்களே நடுவராகப் பணியாற்ற முன் வருகின்ருர்கள், "அன்ருட வாழ்க்கையின் கடுமைகளை அலட்சியப்படுத்தி, மறந்து, மன நிம்மதி பெறவும், புத்துணர்ச்சியும் பூரிப்பும் பெறவுமே வருகிறேம்' என்று நடுவர்கள் கூறுவது உண்மை தானே!

இத்தகைய அதிகார பூர்வமான கடமையுடன், உரிமை யுடன் தமது வேலை முடிந்து பறந்து வருகின்றவர்கள் வந்ததும் வராமலும் தமக்குரிய கடமைகளிலேயே தம்மை மறந்து மூழ்கி விடுகின்றனர்.

விளையாடுகின்ற ஆடுகள மைதானத்தை ஒரு முறை சுற்றிப்பார்த்து, அதில் குறித்துள்ள குறியீடுகளைக் கண் காணிக்கின்ருர்கள். ஆடுதற்கு மைதானம் தகுதியா என அறிந்த பிறகு, குறைகளிருந்தால் நிவர்த்தி செய்த பிறகு, தேவையானவற்றைத் தேடிச் சென்று தயார் செய்ய

வேண்டும். ஆடப் பயன்படுகின்ற பந்து சரியான அளவு காற்றடிக்கப்பட்டிருக்கின்றதா என்பதைத் தேர்ந்து, மூன்று பந்துகளை அதுபோல் தெரிவு செய்யவேண்டும்.

விளையாடும் வீரர்களைக் கண்டு, அவர்களுடன் உரையாடி, விதிமுறைகளை இயல்பாக விளக்கி, தான் ஆற்றப்போகின்ற பணி பற்றிக் கூறி, அவர்கள் எவ்வாறு தம்முடன் ஒத்துழைக்க வேண்டும் என்றும் கேட்டுக் கொள்கின்றார் நடுவர். இதற்கெல்லாம் எவ்வளவு நேரம் ஆகும் என்பதையும் நாம் உணர்ந்து கொள்ளவேண்டும்.

விளையாட்டுக்களை வளர்த்து, நாட்டோரை நல்லின்பத்தில் ஆழ்த்தியும், நலமுள்ளோராக ஆக்கவும், பலம் நிறைந்தவர்களாக மாற்றவேண்டும் என்ற மாபெரும் பணியென்று தான் அவர்கள் உழைக்கின்றார்கள். வருமானந்தான் குறியென்றால், அதற்கு இதுதான் வழியென்றால், இதைத் தேர்ந்தெடுப்பவர்களின் அறிவையே சந்தேகிக்க வேண்டி இருக்கும்.

இத்தகைய அரிய தொண்டுள்ளம் கொண்டுள்ளவர்கள், ஆட்டத்தினை சிறந்த முறையில் நடத்தித் தரவேண்டும் என்றுதான் நடுவர்களாக வருகின்றனர். ஆயிரமாயிரம் ரசிகர்கள் மத்தியிலே ஓடித்திரிந்து பணியாற்றும் பொழுது, தவறு நிகழும். நிகழத்தான் செய்யும். தவறிழைத்தல் மனித சுபாவம்தான். ஆனால் வேண்டுமென்றே தவறு செய்து, ஒரு குழுவைத் தாழ்த்தி வீழ்த்திவிடவேண்டுமென்ற எண்ணத்தின் விளைவல்ல அது.

ஆயிரத்தில் ஒருவராக ஆடுகளத்தில் நின்று, அரசியல் வாதிகள் போல் தங்களின் விருப்பத்திற்கேற்ப முடிவெடுப்பதில், நடுவர்கள் தவறு செய்வதில்லை. அவர்கள் எடுக்கின்ற முடிவுகள், கொடுக்கின்ற தீர்ப்புக்கள் எல்லாம் குறைந்தது 10-க்கு 9 சிறந்தவராகவும் தகுதியானதாகவுமே இருக்

கின்றன என்று இங்லாந்தின் விளையாட்டறிஞர் ஒருவர் விளக்கிக் கூறுகின்றார்.

ஆகவே, விளையாட்டு வீரர்கள் இழைக்கின்ற தவறு களைக் கண்டுபிடிக்காத சூழ்நிலையில், நடுவரால் கவனிக்க முடியாமல், இயலாமல் போய்விடுவதும் உண்டு. நடுவர் ஒருவரே என்பதாலும், எல்லாவற்றையும் அவரே கவனிக்க வேண்டியிருப்பதாலும், 'விதிமீறல் நிகழ்ந்து தவறு நேர்ந்திருக் கிறது என்றாலும் அது எதிர்க்குழுவினரைப் பாதிக்கவில்லை. அத்துடன் பந்து அவர்கள் வசம இருப்பதால் சாதகமே' என்ற நிலையிலும் நடுவர் மேம் போக்காகவும் அந்தத் தவறுதனை விட்டுவிடலாம்.

விளையாட்டிலே விற்பன்னராக விளங்கும் ஆட்டக் காரர்கள் கூட, எப்படியாவது எதிரிகளை ஏமாற்றி வென்று விடவேண்டும் என்பதற்காக, தன்னுள்ளத்தே மூண்டெழு கின்ற ஆர்வத்தால், மிகவும் தந்திரமாகத் தவறு இழைப்பதும, அதனை மற்றவர்கள் கூட்டமாகக கூடி, நடுவர் பார்வைக்குப் படாதவாறு மறைந்து விடுவதும் அன்றாடம் ஆட்டததில் நடக்கின்ற நிகழ்ச்சிகளாகி இருக்கின்றன.

இன்னும் சிலர், தன் எதிர்க்குழுவினரால் அடிப்பட்டு, அதனால் மயக்கமடைந்தவர்போல நடித்துக் கீழே விழுந்து கிடந்து பாசாங்கு செய்வார்கள். இந்த சூழ்நிலையில் எதிரியை, நடுவர் ஆட்டத்தை விட்டு வெளியேற்றிவிடுவார் என்ற நம்பிக்கையில் இப்படி ஏமாற்ற முயல்வாரும் உண்டு.

நடுவருக்குள்ள ஒரு சில குறைகளை, இயலாமையை அறிந்துகொண்டு அதற்கேற்ப, தவறுகள் இழைப்பதையும், விதிமீறலைச் செய்வதையும் ஒரு சில ஆட்டக்காரர்கள் வழக்கமாகவே கொண்டிருக்கின்றார்கள்.

இவ்வாறு ஆட்டக்காரர்கள் திட்டமிட்டுத் தவறிழைக்கும் பொழுது, அது நடுவர் பார்வையில் படாமலும் இருக்கும். அதே சமயத்தில், அருகில் அமர்ந்து வேடிக்கை பார்ப்பவர்களுக்குத் தெரிந்த காட்சியாகவும் இருக்கும். இதனால், இதை வேண்டுமென்றே நடுவர் விட்டுவிட்டு, தங்கள் அபிமான ஆட்டக்காரர்களைத் தோற்கடிக்க முயல்கிறார் என்ற தப்பெண்ணத்தில் திளைப்பவர்களும் உண்டு. இங்கே தான், குதூகலம் கொள்ளவேண்டிய நெஞ்சமெலாம் குழப்பத்திற்கு வழிகாட்டும் காட்டாறாகப் பெருக்கெடுத் தோடத் தொடங்கி விடுகிறது.

ஆட இருக்கின்ற 90 நிமிடங்களுக்குள்ளே 9 அல்லது 10 மைல்களுக்குமேல் நடுவர் ஓடியாடிக் கடமை ஆற்றும் பொழுது, குறைபாடு நிகழ்வது சகஜமே! குறை ஏற்படுவது வரவேற்கத் தக்கதா என்றால், வருந்தத்தக்கதுதான். என்றாலும் தன் திறமை, அனுபவம் முழுமையுமே வெளிப் படுத்தித்தான் நடுவர் பணியாற்றுகின்றார் என்பதையே இன்றுவரை விளையாட்டுலகம் ஒத்துக்கொண்டுதான் இருக்கிறது.

எனவே, சூழ்நிலையை உணர்ந்து பாராது, சுற்றி அமர்ந்து கொண்டிருக்கும் ரசிகர்கள், சூறாவளியெனக் கிளம்பி, மைதானத்திற்குள் நுழைவதும், மனதுக்கு விரும்பாத நிகழ்ச்சிகளில் ஈடுபடுவதும் விளையாடுத்துறை வளர்ச்சியை பாதிப்பதுடன், மறுமலர்ச்சிக்குரிய பாதையையும் அடைத்தே விடுகின்றது.

விளையாட்டுத்துறை வளரவேண்டும் என்று விருப்புகிற அத்தனை பேரும், நடுவரைப் போற்றி ஏற்றுக்கொண்டே யாக வேண்டும். விளையாட்டுக் கலையில் நடுவர்களின் நிலை இனிமையாக இருந்தால்தான் ஆடுவோருக்கும், ஆட்டத்தின் ரசிகர்களுக்கும் இன்பமாக இருக்கும்.

பரந்த ஆடுகளத்தில் பணியாற்றும் நடுவர்களுக்கு மட்டுமல்ல, குறுகிய ஆடுகளத்தில் செயல்படும் நடுவர்களுக்கும் மேலே கூறிய அத்தனை முறைகளும் பொருந்தும்.

நடுநாயகமாக விளங்கும் நடுவர்களை மதிக்க கற்றுக் கொள்வோம். நலம் பயக்கும் விளையாட்டுக்களின் விதிகளை சந்தேகத்திற்கு இடமில்லாதவாறும் கற்றுக்கொள்வோம். **போட்டி ஆட்டங்கள் திறமையை வளர்க்கத்தான் பொறுமையை வளர்க்க அல்ல** என்பதையும் புரிந்து கொள்வோம். ஆடுகின்ற நேரங்களில் உணர்ச்சி வசப்பட்டபோதும் அறிவுக்கு இடங் கொடுக்கும் திறமையையும் பெருக்கிக் கொள்வோம்.

பொதுமக்களின் பொறுப்பினுல்தான் நாடு முன்னேறும் என்ருல், விளையாட்டுக்கு மட்டும் விதிவிலக்கா என்ன? விளையாட்டுக் கலை வளர்த்து, நடுவர்களின் நிலை உயர்த்தி, உலக நாடுகளுக்கிடையே ஒப்பற்ற நாடாக நம் பாரதத்தை உயர்த்துவோமாக!

# 7. டென்னிஸ் ஆட்டத்தின் கதை

1874-ம் ஆம் ஆண்டில் ஒரு நாள் அமெரிக்கத் துறை முகத்தில் அழகு நடைபோட்டுக் கொண்டிருந்த அனைவரின் கண்களும், அதிசயமான பொருள்களடங்கிய பெட்டி ஒன்றையே முற்றுகையிட்டுக் கொண்டிருந்தன. வேடிக்கை பார்த்துக் களித்தவர்கள் போக, வேதனைப்பட்டுக் கொண்டிருந்தவர்களும் அங்கு இருக்கத்தான் இருந்தார்கள். சுங்க இலாகா அதிகாரிகள்தான் அவர்கள். பொருட்கள் புதுமை யானதாக இருந்தால், வரி எவ்வளவு விதிக்கலாம் என்ற முடிவுக்கு வர முடியாத அளவுக்குக் குழப்பம்.

கொண்டு வந்த குமரிக்கோ குழப்பத்திலும் குழப்பம், குதூகலத்தோடு வந்தவளுக்கு வரி விதிப்புக் குறுக்கிட்டது மட்டுமல்ல, பொருளைக் கொண்டு போவதற்கும் பெருந்தடை ஏற்பட்டு விட்டது. வாரம் ஒன்று ஆனதற்குப் பிறகு, அவளது அண்ணன் எமிலியஸ் என்பவர் வந்தார். 'இந்தப் பொருட்கள் எல்லாம் அபாயகரமானவைகள் அல்ல. விளையாடுவதற்கு உதவுகின்ற சாதனங்களே ஆகும் என்று

விளக்கினர். இங்கிலாந்திலிருந்து இறக்குமதியான அந்தப் பொருட்கள், 'ஸ்பெய்ரி ஸ்டைக்' என்ற விளையாட்டுக்குரிய வலை, மட்டை, ஆணிகள், கம்பளிகள் இவைகள் தான்.

நியூயார்க் நகரிலிருந்து விடுமுறையை வளமாகக் கழிக்கச் சென்ற செல்வி அவுட்டர் பிரிட்ஜ் என்பவள், இங்கிலாந்து நகரிலே சுற்றுலா வந்தபொழுது, ஆங்கிலேய ராணுவ அதிகாரிகள், ஏதோ முன்பின் கண்டறியாத ஒரு புது விளையாட்டைப் பெருமகிழ்ச்சியுடனும், புத்துணர்ச்சியுடனும் ஆடி மகிழ்வதைக் கண்டு, நெஞ்சைப் பறிகொடுத்து அங்கேயே நின்று விட்டாள்.

ஆட்டத்தைக் கண்ட ஆனந்த நிலையிலே, தனக்கும் கற்பிக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டாள். அவர்களும் அக்கறையுடன் கற்றுத் தந்ததும், அவளிடம் வந்த அடக்கவொண்ணா ஆர்வமும், அமெரிக்காவுக்கு அந்த விளையாட்டை இறக்குமதி செய்யும் அளவுக்கு சிந்தையில் உற்சாகத்தை ஊட்டிவிட்டது. அதற்காக அவற்றை எடுத்து வந்தபொழுதுதான், அமெரிக்க சுங்க இலாகா அதிகாரிகள் பட்டபாடும், பேரி பட்ட துயரும் முதலில் படித்த நிகழ்ச்சியாகும்.

இத்தனை சுவைமிக்க விளையாட்டு தோன்றிய நிகழ்ச்சியை இனி காண்போம்.

காண்பதற்குக் கவர்ச்சியாகவும், ஆடுதற்கு எளிமையாகவும், பயன்மிக்கதாகவும் இருந்த இந்த விளையாட்டு 1875 ஆம் ஆண்டு இங்கிலாந்தில் தோன்றியது என்று வரலாறு கூறுகின்றது. அந்த வரலாற்றைப் படைக்கும் பெருமை பெற்றவராக விளங்கியவர் மேஜர் விங் பீல்டு என்பவரே! டென்னிஸ் ஆட்டத்தின் தந்தை எனப் புகழ் பெற்ற அவர், இந்த விளையாட்டைக் கண்டுபிடிப்பதற்குரிய அடிப்படைக் காரணங்களும் இருக்கத்தான் இருந்தன.

அக்காலத்திலே, செல்வக்குடி பிறந்த சிங்காரிகளும், சுந்தரர்களும் இன்பமாகப் பொழுதைக் கழிக்கவேண்டும் என்பதிலேயே கண்ணுங்கருத்துமாக இருந்தார்கள். வசந்த காலம் வந்துவிட்டால், வெட்டவெளியிலே கிரிக்கெட், ரக்பீ, கால்பந்தாட்டம் போன்ற ஆட்டங்களை ஆடினர். மழை காலம் வந்துவிட்டால் என்ன செய்வது ?

கூடாரம் அமைப்புள்ள இடங்களிலே ஆடுவதற்கென்று ஒருசில விளையாட்டுக்கள் தோன்றி தூண்டுதல் செய்தவர்களுக்கு இன்பத்தை அளித்தாலும், பெண்களுக்கு என ஓர் விளையாட்டு இல்லையென்ற ஒருகுறை பெருங்குறையாகவே இருந்து வந்தது.

பெண்கள் ஆடவேண்டும், அதவும் ஆண்களுடன் அதாவது கணவன், தம்பி, சகோதரன், தங்கை மற்றும் தோழியர்களுடன் சேர்ந்து ஆடுகின்ற ஆட்டமாகவும் இருக்கவேண்டும். அதிகக் கஷ்டமில்லாத விளையாட்டாகவும் இருக்கவேண்டும் என்று விரும்பினர்.

பெண்கள் ஆசைப்பட்டு நடக்காத காரியம் இந்தப் பரந்த உலகில் இருந்ததுண்டோ ? அவர்களின் கனவு, மேஜர் விங்பீல்டு மூலமாகவே பூர்த்தியானது. இங்கிலாந்திலே பிறந்து, சைனுவுக்குச் சென்று இராணுவ அதிகாரியாகப் பணியாற்றி, மீண்டு வந்த மேஜர், விளையாட்டிலே ஆழ்ந்த பற்றுடையவர். சிறந்த விளையாட்டு வீரர். பரம்பரை பரம்பரையாக வந்த விளையாட்டு வீரர் பரம்பரையிலே தோன்றியவர்.

புது விளையாட்டைக் கண்டுபிடிக்கத் தொடங்கு முன்னரே, பழக்கத்தில் உள்ள பல விளையாட்டுக்கள் அவரது மனக் கண்முன் வந்து விளையாடிச் சென்றன. அவரது ஆராய்ச்சிக் கண்களும் அவைகளை ஆழ்ந்து நோக்கின.

குழிக்குள் கோலிக் குண்டை உருட்டித் தள்ளி நம் நாட்டு சிறுவர்கள் ஆடுவார்களே. அதுபோல 9 குழி களுக்குள் உருண்டையான பந்தினை மட்டை ஒன்றினால் தள்ளி ஆடும் 'ராக்கெட்' என்ற ஆட்டம் இதன் பிறப்புக்குப் புத்துணர்ச்சியை அளித்தது. நடுவிலே வலை கட்டி, இருபுறமும் மாறிமாறி அடிக்கின்ற 'கோர்ட் டென்னிஸ்' என்ற ஆட்டம் இதன் பிறப்புக்குக் கருவாகி அமைந்தது. இந்தியாவிலே பிறந்து பெருமையுடன் விளங்கிய 'பூப் பந்தாட்டம் ஆங்கிலேய ராணுவ அதிகாரிகளுடன் இங்கிலாந்து சென்று பிரபலமாக அந்நாளில் ஆடப்பட்டு வந்தது, அந்தப் பூப்பந்தாட்டத்தில் உள்ள விதிமுறைகள், எண்ணிக்கை முறைகள் எல்லாம் ஆட்டத்திற்குள் புகுந்து ஆட்டத்தை உருவாக்கி விட்டன.

இவ்வாறு, பல ஆட்டங்களின் தொகுப்பும் பகுப்பும், இணைப்பும் முனைப்புமே இந்த ஆட்டமாகி வந்தது என்று பலர் சொன்னாலும், அந்நாளில் 'கைப்பந்து' என்று ஆடப் பெற்ற ஒருவகை ஆட்டமே இதற்கு முன்னோடி என்பார்கள். கிரேக்கத்தில் ஆடிய விளையாட்டின் ஒரு பகுதியே இந்த டென்னிஸ் ஆட்டத்தின் பிறப்பு என்பார்கள். மேஜர் விங்பீல்டு, பெண்களை மகிழ்விக்கவும், தன் பணவீக்கத்தைப் போக்கிப் பெருக்கிக் கொள்ளவுமே இந்த விளையாட்டை ஆட வழி வகுத்தார் கண்டுபிடித்தார் என்ற ஒரு வரலாற்றுக் குறிப்பும் எழிலாக எடுத்துரைத்துச் செல்கின்றது.

1873ஆம் ஆண்டு ஆரம்பித்த தனது ஆட்டத்தை அந்த ஆண்டு நடைபெற்ற கிறிஸ்துமஸ் விழாவன்று தனது நண்பர்களுக்கும் அன்பர்களுக்கும் மேஜர் அதியற்புதமாக ஆடிக்காட்டினார், நண்பர் குழாம் அந்த விளையாட்டை விரும்பி ஏற்றுக்கொண்டாலும் 'ஸ்பெய்ரிஸ்டைக்' என்ற அந்த கிரேக்கச் சொல்லை ஏற்றுக்கொள்ள அவர்கள் விரும்பவேயில்லை. வேறு பெயர் வைக்க வேண்டுமென்றே அவர்கள் வற்புறுத்தினார்கள்.

ஆடுகளம் எப்படி அமைய வேண்டும்? ஆடுதற்குரிய விதிகள் என்னென்ன? வழி முறைகள் எவ்வாறு என்றெல்லாம் புத்தகமாக அச்சிட்டு விற்றதோடு, ஆட்டத்திற்குத் தேவையான வலை, மட்டை, கம்பங்கள், ஆணிகள், கயிறுகள் அத்தனையையும் உண்டாக்கி, விற்றுத் தன் விளையாட்டை விருத்தி செய்த வேளையில்தான் அமெரிக்கக் குமரி வந்து ஆட்டத்தில் ஒன்றிக் கலந்து பொருட்களை வாங்கிச் சென்று, சங்க இலாகாவைச் சிக்கலில் ஆழ்த்திய நிகழ்ச்சியை முன்னரே கண்டோம்.

புதிய ஆட்டம் பொங்கிய பெரு வெள்ளமாக மக்களிடையே பாய்ந்து பரவத்தொடங்கியது. செல்வம்கொழிக்கும் சீமான்கள், சீமாட்டிகள், பிரபுக்கள் மட்டுமல்ல, ஆட்சி செய்யும் இளவரசர்கள், கோமான்கள் அனைவரும் கூடிக் கொண்டு ஆடி மகிழ்ந்திடும் அளவுக்கு இந்த ஆட்டம் விரைவாக வளர்ந்தது,

ஓராண்டு முடிவதற்குள்ளேயே புதிய விதிகளைப் புகுத்தினுர் மேஜர் என்ருலும், வளர்ந்து வரும் விளையாட்டை அவரால் கட்டுப்படுத்த முடியவில்லை. அவரவர் விருப்பம் போல் விதிகளை மாற்றிக்கொண்டும், ஆடும் இடங்களைத் தேவையான அளவுக்கு அமைத்துக்கொண்டும் ஆடி மக்கள் மகிழ்ந்தார்களே தவிர, மேஜர் கூறிய விதிகளை எவரும் ஏற்றுக்கொள்ளவும் இல்லை. எதிர்மாற்றம் கூறவும் இல்லை. டென்னிஸ் ஆட்டம் வளரத் தொடங்கியவுடனே, முன்பிருந்த விளையாட்டுக்கள் பல, முன் நிற்க முடியாமல் மறைந்தொழிந்தன,

ஆட்டத்தில் பந்து வேண்டுமல்லவா? துணித் துண்டுகளைச் சுருட்டிக் கொண்டு அதை நூலால் தைத்துப் பந்தாக்கி முதலில் ஆடினர். அது துள்ளவில்லை. தரையை விட்டுக் கிளம்பவில்லை என்ற குறையிருக்கவே, தோலால் ஒரு பை செய்து, அதற்குள் பறவையின் சிறகுகளையும் பஞ்சு நூல்களை

யும் வைத்து அழுத்தித் தைத்துக் குதிக்க வைக்க முயன்றனர்.

பந்து கனமாக இருந்தது பாறைத் துண்டைப் போல் கனமாக இருந்தது என்பதால், கனமில்லாத பந்து ஒன்று தேவைப்பட்டது. ரப்பரால் பந்து செய்யலாம் என்று கண்டு பிடித்த பிறகு, அதற்கு மெல்லிய மூடி வைத்துத் தைத்து ஆடினர். அடிப்பட்ட பந்துக்குள் காற்று புகுந்து கொள்ளவே, அடிபட்ட பாம்பு சீறுவது போல அடிக்கடி சத்தம் கிளம்பியதால் சிவப்பு ரப்பரால் பந்து செய்து அதன் வலிமைக்கும் உழைப்புக்கும் ஏற்றவாறு நைலான் டெக்காரன் போன்றவற்றைக் கலந்து கொண்டு, புதிய முறையில் இன்றைய நிலையில் உள்ள பந்தினை உருவாக்கி ஆடி மகிழ்ந்தனர்.

பந்து வளர்ந்தது போலவே, அடித்தாடும் மட்டையும் உருவாகத் தொடங்கியது, முதலில் பந்தை வெறும் கைகளாலே அடித்துக் குத்தி விளையாடினர். ஆரம்பத்தில் ஆனந்தமாகவே இருந்தது. போகப்போக கைகளில் வலி எடுக்கவே கையுறைகளை அணிந்துகொண்டு ஆடத் தொடங்கினர். அப்படியும் வலி ஏற்படவே வெறும் நீண்ட கம்புகளை வைத்து அடித்தாடினர். குறி அதில் சரியாக வரவில்லை என்பதால்தான், உள்ளங்கை அகலம் விரிந்து இருப்பதுபோன்று நீண்ட கம்பிகளையும் அதன் தலைப் பாகம் விரிந்துள்ளதைப் போலவும் அமைத்துக்கொண்டு ஆடினர்,

'ராக்கெட்' என்ற அராபியச் சொல்லுக்கு 'உள்ளங்கை' என்று பொருளாகும். முதலில் உள்ளங்கையில் பந்தை அடித்து ஆடியதால்தான் மட்டைக்கு இந்த பெயர் வந்தது. அதாவது ராகெட் என்ற சொல் ஆங்கிலத்தில் ராக்கெட்டாக மாறியது,

வெறும் மரத்தாலான மட்டையில் பந்தை அதிவேகமாக அடிக்க முடியவில்லை என்பதனால் மட்டையின் அகலப் பகுதிக்குள்ளே நரம்புகளை வைத்துக் கோர்த்து இழுத்துக் கட்டி 'ராக்கெட்' என்ற பெயரிட்டு ஆடினர்

ஆட பந்தும், அடித்தாட மட்டையும் வந்துவிட்ட பொழுது, எந்த உடை அணிந்துகொண்டு ஆடவேண்டும் என்று அவர்கள் அலட்டிக்கொண்ட விதம் மிகவும் விநோத மாகவே இருந்திருக்கிறது. முதலில் பெண்கள் படுத்திய பாட்டைப் பார்ப்போம்.

ஆடுகளத்தில் ஆடுவதற்கு என்று வந்த பெண்கள் தங்கள் பணக்கார பாரம்பரியத்தைக் காட்டுவதற்காகத் தரையைக் கூட்டும் அளவுக்குத் தாழ்ந்து தவழ்ந்த கவுனை மாட்டிக்கொண்டு, பின்னால் தொங்கிப்புரளும் மேலுடைகள் அத்தனையையும் ஒரு கையால் தூக்கிக்கொண்டு மற்றொரு கையில உள்ள மட்டையால் பந்தாடினர். அது வசதியாக இல்லை என்றதால 'எலின்' என்ற பெண்மணி கணுக்கால் வரை உள்ள கவுன் அணிந்து வந்து ஆடியது கண்டு அனைவரும் அம்முறையைத் தொடர்ந்தனர்.

மீண்டும் ஒரு புரட்சி. முழங்காலுக்கு கீழே இருந்தால் சிறிது வசதியாக இருக்கும் என்று 'மோலர்' என்ற பெண்மணி, கவுன் அணிந்து வந்தாள். அதுவும் சங்கடமாக இருக்கிறது என்பதால பிடித்துக்கொண்டு காலோடு காலாக ஒட்டியிருக்கும் 'ஸ்டாக்கிங்ஸ்' அணிந்து கொண்டு ஆட முயன்றனர். அது இல்லாமல் ஆடவே கூடாது என்றும் விரும்பினர். ஆனால் நடந்ததோ வேறு.

ஹெலன் ஜேக்கப் என்னும் வீராங்கனை, வெறுங்காலோடு காலுறையின்றி கவுன் அணிந்து வந்ததால் அந்த முறையும் மாறிற்று. அனைவரும் பின்பற்றினர்.

ஆண்கள் முதலில் முழுக்கால் சட்டை, முழுக்கையுள்ள சட்டை அணிந்தே ஆடவேண்டும் என்றிருந்தது. கொஞ்சங் கொஞ்சமாக முழுக்கை சட்டை, அரைக்கால் சட்டை, என்று மாறி கடைசியில் அரைக்கால் சட்டை, கையுள்ள பனியன் என்று இறுதியில் மாறி வந்துவிட்டது.

ஆண் பெண் என்று ஒரு குழுவில் இணைந்தாடும் ஆட்டத்தில் ஆரம்ப காலத்தில் பெண்களைப் போலவே ஆண்களும், தரை கூட்டும் ஆடை அணிந்தது மட்டுமல்ல, பெண்களைப் போலவே உடையணிந்து தூக்கியவாறு ஆடினர். காரணம் என்னவென்றால் அப்பொழுதுதான் பெண்களுக்கும் ஆட சம வாய்ப்பு ஏற்றாற்போல் இருக்கும் என்பதால்தான்.

டென்னிஸ் ஆட்டம் ஆரம்ப காலத்தில் புல் தரையில் ஆடப்பெற்றது. புல் தரையிலிருந்து மணல் தரைக்கு மாறி, மணல் தரையிலிருந்து களிமண் பூமிக்கு வந்து, அதிலிருந்து சிமிண்டு தரைக்குமாறி ஆடுகளத்தின் அமைப்பு முன்னேறி வந்துவிட்டது. அத்துடன் கருங்காரை மண் வைத்தும், பலகைகளை அமைத்தும் ஆடுகளம் அமைத்து விளையாட்டில் விறுவிறுப்பைப் பெருக்கி மகிழ்ந்தனர்.

இவ்வாறு ஆளுக்கொரு விதியும் ஊருக்கொரு அமைப்புமாக ஆடப்பெற்ற டென்னிஸ் ஆட்டத்தைச் செழுமைப் படுத்தி, செம்மையானதாக ஆக்க இங்கிலாந்தில் இருந்த மெரிலிபோன் சங்கம் முன் வந்தது முழுமையான ஆட்ட விதிகளுடன் ஆட்டத்தைக் கட்டுப்படுத்தியது அதன் பின்னர்தான் இப்பொழுது பிரபலமாக விளங்கும் விம்பிள்டன் டென்னிஸ் பந்தயப் போட்டி 1877ஆம் தொடங்கப்பெற்றது.

இங்கிலாந்தைப் போலவே அமெரிக்காவும் டென்னிஸ் வளர்ச்சிக்குப் பெரிதும் பாடுபட்டிருக்கிறது. டேவிஸ்

என்பவர் இவ்விளையாட்டிலே ஈடுபட்டுத் தன்னையே இழந்து விட்டு இன்பத்தில் மிதந்தபொழுதுதான், அகில உலகப் போட்டி ஒன்றை நடத்தவேண்டும் என்று அவர் ஆசைப் பட்டார். தன் பெயராலேயே 'டேவிஸ் கோப்பை' ஒன்றை வழங்கி 1900ஆம் ஆண்டு தொடங்கி விட்டார். அதன் வழியே இன்று அனைத்துலக நாடுகளும் ஆர்வமுடன் போட்டியிட்டு பேரின்பம் காணுகின்றன.

விளையாட்டுக்களை விநயமுடன் ஆடிக் களிக்க, முதலில் தேவை நலமான உடலே வேண்டும்.

நலமான உடலை நயமான முறையில் பெற நாளெல்லாம் உதவுவது உடற்பயிற்சியே யாகும்.

உடற் பயிற்சியின் உண்மை நிலை புரியாது உளறும் நண்பர்களுக்கு, அதன் உயர்ந்த தன்மையின் விளக்கத்தை அடுத்து வரும் கட்டுரையில் காண்போம்,

# 8. உடற்பயிற்சித் துறையும் உலகத்தார் குறையும்

உடலைத் திறமாகவும். தரமாகவும், நிறமாகவும், நலமாமவும், நாள் முழுதும் வளமாகவும் வைத்துக்கொள்ள மேற்கொள்கின்ற அரிய முயற்சியைத்தான் உடற்பயிற்சி என்கிறோம்.

உடற் பயிற்சியின்போது, இயற்கையாக உடல் உறுப்புக்கள் பெறுகின்ற இயக்கத்தில் ஒரு லாவகமும், விளையாடும்போது பெறக்கூடிய அதிக உற்சாகமும், வேலை செய்யும்போது பெறகின்ற கடமையுணர்வும் காரிய சித்தியும் கைமேல் பலனும் கிடைக்கின்றது என்பதால்தான், உடற் பயிற்சியை உலகத்தார் போற்றுகின்றனர், ஏற்றுகின்றனர். பாராட்டிப் பரவசப்படுகின்றனர்.

என்றாலும், எங்கேயோ ஒரு மூலையிலிருந்து ஒரு சில எதிர்ப்புக் குரல்கள், ஏளனப் பேச்சுக்கள் எப்படியோ எதிர் வருகின்றன. புதிர் போடுகின்றன. "முறுக்கேறிப் போகிறது உடல்; கிறுக்கேறிப் போகிறது மனம். அதனால் உடற்பயிற்சி என்பது தேவையில்லாத ஒன்று, இது தீர்க்கப் படவேண்டிய ஒன்று" என்று, தீர்க்கதரிசிகளைப் போல பேசுவோர் உண்டு.

"உடற்பயிற்சி செய்பவன் உண்மையிலே முரடனாகி விடுகிறான். அவனது சொல்லும் செயலும் மனித பழக்க வழக்கத்திற்கு மாறுபட்டது போலவே இருக்கிறது" என்று முன்னவர் கருத்துக்கு மேளம் தட்டுவோரும் உண்டு.

"உடற் பயிற்சி செய்பவர்கள் அதிக நாட்கள் வாழ்வதில்லை, இதய நோய், மாரடைப்பு, நெஞ்சுவலி போன்ற நோய்களுக்கு ஆளாகி, குளிக்கப் போய் சேற்றைப் பூசிக் கொள்வது போன்று, இன்பம் தேடிச் சென்று துன்பத் தால் மடிகின்றார்" என்று பாட்டிக் கதை பேசுகின்ற பாமரர்களும் உண்டு.

"உடற்பயிற்சி செய்பவர்கள் ஆண்மையிழந்து விடுகின் றனர். அதிலும் அலித் தன்மைக்கு ஆளாகிவிடுகின்றனர். அவர்களுக்கு வாரிசுத் தன்மையும் வீரியமும் அற்றுப் போகின்றது. விந்தும் நீற்றுப் போய் விடுகின்றது" என்று ஆராய்ச்சி எனக் கூறி அவதூறு பேசுவாரும் உண்டு.

உடற் பயிற்சித் துறைபற்றி உலகத்தில் ஒரு சிலரால் பேசப்படுகின்ற குறைகள்தான் மேலே எடுத்துக் காட்டப் பட்டிருக்கின்றன. அத்தனைக் குறைகளையும் மொத்தமாகச் சுமந்துகொண்டு, இத் தரையில் எழிலாக, முழு நிலவாக உடற்பயிற்சி பவனி வருகிறது என்றால், நாம் அதை நன்கு சிந்திக்க வேண்டுமல்லவா! சீரிய கடமையும் நமக்கு இருக் கிறது அல்லவா!

யாரோ ஒருவர் அவசரமாக சாப்பிடும்போது சோறு விக்கிச் செத்தான் என்றால், "சாப்பிட்டால் விக்கிக் கொள்ளும்; நாமும் செத்து போவோம்" என்று யாரும் சாப்பிடாமல் இருப்பதில்லை. பட்டினி கிடந்து பாழாவதில்லை. ரயில் பிரயாணத்தில், தடம் புரண்டால் நசுங்கிப்போய் விடுவோம் என்று பயந்து கொண்டு யாரும் ரயில் பிரயாணத்தை நிறுத்தியதில்லை. நிர்தாட்சண்யமாகப் பேசியதுமில்லை.

ஆகவே, செய்பவரிடம்தான் பழுது இருக்கிறதே தவிர; பயன் தரும் பொருளிடத்தில் அல்ல என்பதை நாம் முதலில் உணரவேண்டும்.

இரும்பு கோணினால் எதற்கும் பயன்படும், கரும்பு கோணினால் அது தன் சுவையில் குன்றாது. அரும்பு கோணினால் மணம் மறக்குமோ! ஆனால் நமது நரம்பு கோணினால் என்ன நடக்கும் என்பதை கொஞ்சம் சிந்தித்துப் பாருங்கள்.

உடற்பயிற்சியின் நோக்கமானது, நரம்புகளை இரும்பென வலிமையூட்டவும், அரும்பென மணக்கவும், கரும்பென சுவைக்கவும் போன்று நன்மையில் செயல்படுவதே தவிர வேறு எதற்கும் அல்ல என்பதை நாம் விளங்கிக்கொள்ள வேண்டும்.

உடற் பயிற்சியானது உடல் உறுப்புக்களின் இயக்கத்தோடு, சுவாச முறையில் மேலும் விருத்தியடையச் செய்யும் அரிய முயற்சியில், வெளியில் திரியும் வளியினை வாங்கி, வயத்தில் அடக்கி நிலைத்திருக்கிற பயிற்சியாகச் செய்யப்படுகிறது. அதாவது, வெட்ட வெளியிலே உலா வரும் காற்றினை அதிக அளவில் உள் மூச்சாக இழுத்து, லாவகமாக அடக்கித் தேவையில்லாத காற்றை வெளியே விட்டு விட்டால்; பளிங்காக உடல் பளபளக்கும். உரோமம் கறுக்கும்; உறுப்புச்

சிவக்கும் என்று சித்தர் திருமூலர் பாடுகிறார்.

"ஏற்றி இறக்கி, இருகாலும் பூரிக்கும்
காற்றைப் பிடிக்கும் கணக்கறி வாரில்லை.
காற்றைப் பிடிக்கும் கணக்கறி வாளர்க்குக்
கூற்றை உதைக்குங் குறியது வாமே!"

காற்றுக்கு அவ்வளவு சக்தியா என்று கேட்கும் கேள்விக்கு அவர் பாடுகின்ற வரிகளைப் பாருங்கள் படியுங்கள்.

எமனையும் எட்டி உதைக்கின்ற சிறந்த வலிமை திறமை, உடற் பயிற்சியால் காற்றைப் பயன்படுத்திக் கொள்ளும் தன்மையால் பெற்றுவிடலாம் என்றால், உடல் எத்தகைய முழுத் தன்மையை, மேன்மையை அடைகிறது என்பதை நாம் எளிதாகப் புரிந்துகொள்ளலாமே!

உடல் முறுக்கேறுகிறது அதனால் உள்ளம் கிறுக்கேறு கிறது என்று உளருவோருக்கு 'வளமான உடலில் தான் வளமான மனம் வாழும்' என்று வாழ்க்கையின் குறிக் கோளாக வாழ்ந்த கிரேக்க மக்களை நினைவுக்குக் கொண்டு வருவோம். இயற்கை வாழ்வு வாழ்ந்த தமிழினத்தாரை நினைவில் நிறுத்துவோம். சித்தர் பாடுகின்றார்.

"புறப்பட்டு வாயு புகவிடா வண்ணந்
திறப்பட்டு நிச்சயம் சேர்ந்துடன் நின்றால்
உறப்பட்டு நின்றது உள்ளம்"

ஆகவே, உடல் உறுதி பெறுகிறபோது, உள்ளமும் உறுதி பெறுகிறது என்பது உண்மையாகின்றதன்றோ!

"நெறியைப் படைத்தான், நெரிஞ்சலைப் படைத்தான் நெறி யில் வழுவின், நெரிஞ்சில் முள் பாயும்" என்ற திருமூலர் பாடலுக்கிணங்க, எந்த வழி நடைப் பயணத்திலும் ஏனோ

தாலே என்ற முறையில் நடந்தால் வீணான வருத்தமும், விரும்பத் தகாத முடிவுமே கிடைக்கும் என்பதை நாம் நன்கு உணர்ந்து கொள்ள வேண்டும் அதே நிலைதான் உடற் பயிற்சியிலும்.

செல்களாலும் திசுக்களாலும் தசைகளாலும் எலும்பு களாலும் இரத்தத்தாலும் ஆன நமது உடலை, உறுப்புக்களை இயற்கையாக இயக்கினால், இனிமையாகவே இயங்கும். தன் குழந்தை சீக்கிரம் வளர வேண்டும் என்று அளவுக்கு மேல் உணவைத் திணித்துக்கொண்டே இருந்தால் குழந்தை வயிறு என்னவாகும்? உண்மையை உணர வேண்டும். அதே நிலை தான் உடற்பயிற்சியிலும்.

பயிற்சியால் பலன் கிடைக்கிறது என்பதை உணர்ந்த ஒரு சிலர் அவசரம், ஆவேசம், பதட்டம், பண்பாடில்லாத செயல் முறையால், வேகமாகச் செய்தால் விரைவில் பலன் கிடைக்கும் என்ற விதண்டாவாத முறையில் இயங்கும் போது உடல் முறுக்கேறுகிறது. உள்ளம் கிறுக்கேறுகிறது என்பது உண்மைதான்.

கரையடங்கி ஓடும்போது தான் தண்ணீரைக் கண்டு நாம் மகிழ்கிறோம். கரையுடைத்துக் கொண்டு காட்டாறாகப் போகும்போது, சபிக்கிறோம் அல்லவா! கட்டுக்கடங்காத ஆவலும், அவசரமும் கால விரயத்தை மட்டுமல்ல. தேக நாசத்தையும் அல்லவா உண்டு பண்ணிவிடுகிறது. அவசரப் பட்டு ஆத்திரத்துடன் பயிற்சி செய்யும்பொழுது உறுப்புக்கள் 'பிடித்து'க் கொள்கின்றன. பெரும் முறிவைக்கூட சில சமயங்களில் உண்டாக்கி விடுகின்றன.

அதனால் பயிற்சியே தேவையில்லை என்பது வீணான வாதம். பயிற்சி செய்பவன் முரடனாகின்றான். மனம் பாறை போலாகி விடுகிறது என்றால், படித்தவர்கள் கூட சில சந்தர்ப்ப சூழ்நிலைகளில் பண்பாடில்லாமல் நடந்து கொண்

கின்றனர். அதற்காகப் 'படிப்பே பாவம் தரும் செயல்' என்று எல்லோரும் ஒதுக்கிவிடுவதில்லையே. முரட்டுத் தனத்திற்கும் முட்டாள் மனத்திற்கும் பயிற்சி காரணமல்ல. பழக்க வழக்க தோஷமே தவிர, பயிற்சியே காரணம் என்று மாற்றுந்தாய் பாணியிலே குறை கூறக் கூடாது.

பயிற்சியின் நோக்கமே உடலைச் செம்மைப்படுத்துவது, உறுப்புக்களை சீராக்குவது, மனதை செழுமைப் படுத்துவது, உடலை நேராக்குவது நிறையாக்குவதுதான். எப்படி என்று சிறிது விளக்குவோம்.

உடலைப் பயிற்சியுடன் இயக்கும்போது, அதிக சுவாச முறையை மேற்கொள்ளுகின்றோம். அதிகமாக உட்கொண்ட உயிர்க் காற்றை நுரையீரல் நிறைவோடு ஏற்று நிரப்பிக் கொள்கிறது. உயிர்க் காற்றுக்காக ஏங்கிக் கொண்டிருந்த செல்களுக்காக இரத்தத்திலுள்ள சிவப்பணுக்கள் காற்றினை ஏந்திக் கொண்டு விரைகின்றன. அதனால் இரத்த ஓட்டம் விரைகிறது. இரத்த ஓட்டம் விரைவு பெறுகிறது. செல்கள் செழிப்படைகின்றன. இரத்தம் தேவைக்கேற்ப கிடைப்பதால், உறுப்புக்கள் உற்சாகமாக வளர்கின்றன. வலிமை பெறுகின்றன. வீணான கழிவுப் பொருள்கள் விரைவாக வெளியேற்றப்படுவதால் உடல் சீராக இயங்குகிறது.

உடலில் உயிர்க் காற்றை அதிகப்படுத்தவும், இரத்த ஓட்டத்தை விரைவு படுத்தவும், இதயத்தின் ஆற்றலை மிகுதிப்படுத்தவும், உழைத்த நேரம் போக ஓய்வெடுக்கச் செய்யவும் உடற் பயிற்சி உதவுகிறது. காலத்தின் கோலம் உடலில் ஏறும்போது, உடல் தளருமே, அதனைச் சரி செய்யவும், இளமையில் தேகம் எழில் பெறுமே, அதற்கு ஏற்றமும் ஊட்டமும் கொடுக்கவுமே உடற்பயிற்சி உறு துணையாக வருகிறது.

இவ்வாறு, அரிய பயிற்சியை அளவோடு தரமாகச் செய்யும்போது உடலும், உறுப்பும், நரம்பும், தசையும் வலிமை பெறும்போது விந்து நீற்றுப் போவதற்கோ, வீரியம் கெட்டுப் போவதற்கோ, அலித் தன்மை ஏற்படுவதற்கோ எப்படி சூழ்நிலை அமைகிறது? என்பதுதான் கேட்க வேடிக்கையாக இருக்கிறது. உடல் பயிற்சியால், இரத்த ஓட்டத்தால் உடல் சூடேறுகிறது என்றால், அது பதமான சூடுதான். அது உறுப்புக்களைப் பண்படுத்தும் சூடல்ல. பயிற்சியை வெறியோடு செய்தால், செய்யத்தகாத முறையில் செய்தால் இரத்தமும் அதிகமாக சூடேறும். அது உண்மையான பயிற்சி அல்லவே! முரட்டுத் தனமும், முட்டாள் தனமும் வெறித்தனமும் வீறிட்டு கிளம்பும் சாதன முறையும் உடற்பயிற்சிக்கு அப்பாற்பட்ட செயல்களாகும்.

உடற்பயிற்சியால் பெற்ற அழகான உடலைக் காத்துக் கொள்கின்ற ஆர்வத்தால் எழுகின்ற மனக் கட்டுப்பாட்டின் காரணமாக, பயிற்சியாளர்கள் உடல் உறவில் சிக்கனமாகவும் மிதமாகவும் இருக்கலாம். அதை வைத்துக் கொண்டு அவர்களை 'அலிகள்' என மதிப்பிடுவது பொருந்தாத கூற்றல்லவா! பயிற்சி செய்பவர்களுக்குக் குழந்தை செல்வம் அதிகம் என்பது உலகம் அறிந்த உண்மையாயிற்றே!

ஆகவே, மனக் கட்டுப்பாட்டிற்கு வேறு பெயர் அலித் தன்மை அல்ல. உரமான உடலில் உணர்ச்சிப் போர்தான் மூளுமே தவிர, உணர்ச்சிகள் குன்ற வழியே கிடையாது என்பது தான் உண்மை. இயற்கை நீதியுங்கூட.

இறுதியாக, பயிற்சி செய்பவர்கள் விரைவில் மாண்டு போகின்றார்கள், நோய்வாய்ப்படுகின்றார்கள் என்பது ஒரு வாதம். அது பயிற்சியாளர்கள் புரிகின்ற குற்றமே தவிர, பயிற்சியின் தூண்டல் அல்ல. பயிற்சியால் பண்பட்ட உடலைப் பெற்றவர்கள், தன்னை யாராலும் எதுவுமே செய்து

விட முடியாது என்று கர்வத்தால் இயற்கையை எதிர்த்து வாழ முற்படுகின்றனர், முயற்சிக்கின்றனர்.

சாதாரண உடல் வளம் உள்ளவன் மழை, வெயில், குளிரைக் கண்டு தடுப்புத் தேடிக் கொள்கிறான். பயிற்சியாளனோ தடுப்பு இன்றி, இரவென்றும் பகலென்றும் பாராமல் திறந்த மார்போடு திரியும்போது, உடல் என்ன ஆகும்? ஆகவே, அவன் இயற்கையால் நாளாக நாளாக நலிந்து, தன்னைத்தானே நாசப்படுத்திக் கொள்கிறானே தவிர, பயிற்சி அவனைப் பாழ்படுத்துவதே இல்லை.

ஆகவே, உறுதியான மனத்தையும் உழைக்க விரும்புகின்றவர்களையுமே உடற்பயிற்சி வரவேற்கிறது.

காக்கையின் கூட்டில் முட்டையிட்டு அதன் முட்டையை உடைத்துக் குடித்துவிட்டுத் தன் இனத்தை விருத்திச் செய்து கொள்கின்ற வஞ்சகக் குயில்களைப் போல, பிறர் உழைப்பில் வாழத் துடிக்கும் சோம்பேறித் தேனீக்களைப் போல, அடுத்தவர் உடலில் ஒட்டிக்கொண்டு இரத்தத்தை உறிஞ்சி வாழும் உண்ணிகளைப் போல, அட்டைகளைப் போல, சோம்பேறிகளாக வாழ்கின்ற மக்களால் நிச்சயம் உடற்பயிற்சியைச் செய்ய முடியாது.

பிறர் உழைப்பில் பயன் பெறும் பேடிகளால் உடற்பயிற்சியை உணரவே முடியாது. 'பாடுபட்டால்தான் பலனுண்டு' என்ற பழமொழி உடற்பயிற்சிக்கே பொருந்தும்.

உடற்பயிற்சியால் பெறுகின்ற சுகத்தை, வெறும் வார்த்தைகளால் எழுதிக் காட்டவோ சொல்லிக் காட்டவோ முடியாது. "தான் பெற்ற இன்பம் இன்னதென்று பிறருக்கு விரித்துரைக்க முடியாத உணர்வையே 'அகம்' என்று தமிழிலக்கியம் கூறும். அந்த விளக்கமே, அந்த அற்புத சுகத்தின் விளக்கமே உடல் பயிற்சிக்கும் பொருந்தும்.

# 9. உடலும் ஒரு தெய்வமே !

உச்சி வெயில் உலகை ஆண்டு கொண்டிருந்தது. ஆவி பறக்கும் தணலிலும், அடி சுடும் மணலிலும் வறுக்கப்பட்ட ஒரு வழிநடைப் பயணி, பெருமூச்சைப் பெருக்கியபடி நடந்து வந்தான். உடல் நனைந்தது வியர்வையால், உள்ளம் அழுதது வேதனையால். ஓய்வெடுக்க ஏதேனும் இடம் கிடைக்குமா என்று ஏங்கித் தவித்தது இதயம். பார்க்கக் கூசிய கண்கள் படபடத்தன.

கண்ணுக்கெதிரே ஒரு காட்சி, கிளைகளும் தழைகளும் செழித்து நின்ற ஒரு மரம் தலையாட்டி இவனை வரவேற்பது போல அசைந்தாடியது. தென்றல் தேடி வந்து அவனது தேகத்தைத் தழுவி, இடத்தைக் காட்டி அழைத்துச் சென்றது. நிழலும், நிழல் தந்த சுகமும், தென்றலின் குளுமையும் அவனது தேகத்தைத் தாலாட்டிக் கொண்டிருந்தன.

நிழல் வருமா, நிம்மதி தருமா என்று ஏங்கிய நெஞ்சின் நிலை மாறியது. நாவுக்குச் சுவையாக ஏதேனும் அறுசுவை

உணவு இப்பொழுது கிடைத்தால் எவ்வளவு நன்ருக இருக்கும் என்று ஏங்கியது. உண்டுவிட்டால், இந்த தரையே போதுமே உறங்க என்று எண்ணித் தடுமாறியது. என்ன ஆச்சரியம் ? வாழை இலை விரிக்கப்பட்டு, வளமான உணவு அதன் மீது அழகுறப் படைக்கப்பட்டிருந்தது. வகைகளைக். ண்டான். வாயாற உண்டான்; மகிழ்ந்தான்.

வயிறு நிறைந்தது. தரையில் படுக்க எண்ணிய நெஞ்சம் தடுமாறியது. ஏதாவது கட்டில் மெத்தை இருந்தால், களைப்பும் தீரும், கண்ணுறங்கவும் கூடும் என்று கருதினன். என்ன ஆச்சரியம் ! இலவம் பஞ்சு மெத்தை தோற்பது போல எழிலான மெத்தையுடன் ஒரு கட்டில் எதிரே கிடந்தது.

காலை நீட்டிப் படுத்தான். கால்களில் வலி மிகுந்திருந்தது. கன்னியர் நால்வர் கூடி அமர்ந்து கால்களைப் பிடித்து விட்டால் எவ்வளவு சுகமாக இருக்கும் என்று நினைவை மேயவிட்டான். என்ன ஆச்சரியம் ! தேவலோக அழகியர் போன்ற நால்வர் அவனைச் சுற்றி அமர்ந்து, தேகத்தை மலரைப் போன்று வருடியவாறு, இதமாகப் பிடித்து விட்டுக் கொண்டிருந்தனர். யார் முகத்தில் விழித்தேனே ? நினைத்த தெல்லாம் நடக்கிறதே என்று நெஞ்சம் நெகிழ்ந்தான், நீராய் நெக்குருகினுன், நிலை மறந்தான். ஆனாலும் உறங்கினானில்லை.

இன்னும் நினைவுகளை நெஞ்சம் அடைக்காமல் நீட்டி விட்டது. இவ்வளவு சுகமாக நாம் இருக்கும்போது... அசை போட்டது ஆசை.

அறுசுவை உண்டி, அகம் குளிரும் தென்றல், அருமையான படுக்கை, அருகிலே அழகியர் கூட்டம்... இப்படி இருக்கும் இந்த நேரத்தில் புலி வந்தால் என்ன செய்வது ? நினைத்ததுதான் தாமதம். புலி வந்தது, பாய்ந்தது, அவனைக் கொன்றது. தின்றது, சென்றது. பாவம் ! அவனுக்குத்

தெரியாது அவன் படுத்திருந்த மரத்தின் நிழல் தந்த இடம், தங்கியிருந்த மரம் கேட்டதையெல்லாம் கொடுக்கக்கூடிய சக்திவாய்ந்த கற்பக மரம் என்று. அனுபவிக்கக் கொடுத்து வைக்காமல் அகால மரணமடைந்து விட்டானே !

இப்படித் தான் இருக்கிறார்கள் நமது மக்களும். கேட்டதை யெல்லாம் கொடுக்கின்ற, சகல சக்தியையும் படைத்தது நமது உடல் என்று யாருமே நினைப்பதுமில்லை. நினைத்தாலும் நம்புவதில்லை. "உயிரெனும் சரக்கினைக் கொள்ளும் காயப்பை, இது மாயப்பை" என்று மடத்துச் சாமியார்களைப்போல, வீணே பேசிப் பொழுதைப் போக்கு கின்றனர்பலர். இது காயப்பை மட்டுமல்ல; 'சகலவித இன்பங் களையும் தருகின்ற சகாயப்பை' என்பதை ஏனோ எல்லோரும் நினைக்க மறந்து விடுகின்றனர்.

சிற்றெறும்பு ஆதியாக சீவகோடிகள் ஆயிரங்கோடி இந்த உலகில் இருந்தும், நிமர்ந்து நேராக நிற்கவும், நினைத்து மகிழவும், மகிழ்வுடன் பேசவும், வாயாறச் சிரிக்கவும் போன்ற அற்புதமான அரிய உடலைப் பெற்றிருப்பது மனித இனந் தானே, அரிதரிது மானிடராகப் பிறத்தல் அரிது என்பதையும் நாம அறிந்ததுதானே !

அததகைய அரிய உடலை அனுதினமும் நாம் காக்கா விட்டால, என்ன ஆகும் ? "உடம்பால் அழியில் உயிரால் அழிவர். திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்"என்பதை உணாந்து கூறிய திருமூலர் மேலும் பாடுகிறார். "உடம்பை வளாக்கும உபாயம அறிந்தே, உடம்பை வளர்த்தேன் உயிர் வளாத்தேனே"

ஏனுக உடம்பை வளர்ப்பானேன் ! மண் தின்னப் போகும் மனித உடலுக்கு என்ன காப்பு வேண்டிக் கிடக் கிறது ? என்று வாதாடுவோர் உண்டு. இருக்கும் வரை சிறகக வழியிலலாமல் அழுக்கில் புரண்டு அழுகியா சாவது? இது அறிவுடையோர்க்கு அழகாகுமா? அழகான உடலைப்

பெற்ற ஆறறிவு படைத்த மனிதர்கள் அருமையாக அல்லவா காக்க வேண்டும்? புனிதம் நிறைந்ததாக அல்லவா தினமும் வாழவேண்டும் என்று கேட்கின்ற சித்தர் கூறும் காரணத்தைப் படியுங்கள்.

உடம்பினுள்ளே உத்தமன் கோயில் கொண்டான் என
உடமபை வளர்த்தேன் உயிர் வளர்த் தேனே.

நாயகன் நமது உடலுக்குள்ளேயே வருகிருன், வாழ்கிருன் என்ருல் நாமெல்லாம் எவ்வளவு நாணயமாக வாழ வேண்டும்? உடலின் இத்தகைய மகிமையை உணராமல், நாய்க்குக் கிடைத்த தேங்காயை உருட்டிக் கிடப்பது போல நாளெல்லாம் நாம் வாழலாமா? "கூறுங்கலைகள் பதினெட்டும் ஊறும் உடம்பு" என்று நமது உடலைப் புகழ்ந்து பாடுகின்ருர் சித்தர்.

'ஒத்துப் பொறியும் உடலும் இருக்கவே, செத்துத் திரியும் மக்களாகவே' எல்லோரும் வாழ்ந்து இறக்க வேண்டும் என்பது விதியல்ல. வேதாந்தமுமல்ல. உடலை வைத்தேதான் இந்த உலக வாழ்க்கையே இருக்கிறது. இத்தகைய நடமாடும் இந்த அற்புத மாளிகையை, அழகிய பசுஞ்சோலையை, ஆனந்த உலகைப் பாதுகாத்துக் கொள்ளாவிட்டால், மனதிலே வேதாளம் சேரும். நினைவிலே நிச்சயம் வெள்ளெருக்குப் பூக்கும். போகும் பாதையெல்லாம் பாதள மூளி படருமே! நாளும் பல பிணி ஓடி வந்து சரண்புகுமே உடலில், நோய் நுழைந்த உடற்கூட்டில். நிறைந்து கிடக்கும் நீடுகலை, கல்வி, நீள்மேதை, கூர்ஞானம் அழியும். பிறந்த குலம் மாயும். பேராண்மை ஓயும், பிறகு, அவலமாக அல்லவா இந்த அற்புத உடல் அழிந்தொழியும்.

ஓராயிரங்காலம் தவமிருந்து பெற்று, வாராது வந்த மாமணியைப் பாராது. எங்கே வருங்கால மக்கள் அழிந்தொழிந்து விடுவார்களோ என்று முக்காலமும் உணர்ந்தே தான் பாடிச் சென்றிருக்கின்ருர் சித்தர்.

**"தன்னை யறியும் அறிவை அறிந்தபின்
தன்னையே அர்ச்சிக்கத் தானிருந் தேனே"**

"ஊனுடம்பாலயம், உள்ளம் பெருங்கோயில், வள்ளல் பிரானுர்க்கு வாய் கோபுர வாசல், தெள்ளத் தெளிந்தார்க்கு சீவன் சிவலிங்கம்" என்று பாடியவர் தன்னையே பூசை செய்யும் அறிவினைப் பெற்றதெவ்வாறு? சீரிய சிந்தனைக்குப் பின் வந்த தெளிவல்லவா இது? தனது தேகத்தைத் தானே அர்ச்சிக்கத் தொடங்கி விட்டது தகைமை யல்லவா!

மாடு ஆடு மரித்தால், தோலாலும் கொம்பாலும் பயன் படும். ஓடாகப் பயன்படுமே மண்பானை உடைந்தால். வீடு கூட இடிந்தால் கழுதை ஒதுங்க இடந்தருகிறது. காடு விழுந்தால் மரம் கிடைக்குமே! அதேபோல் நமது உடற்கூடு மடிந்தால் எதற்குப் பயன்படுகிறது? மரம், செடி, கொடி, வீடு, குளம், பாலம் இவைகளைப் பார்த்து, இத்தனை நாள் இவ்வளவு ஆண்டு இருக்கும் என்று கணக்கிட்டுக் கூறுகின்ற மனிதர்களின் வாழ்நாளை எத்தனை நாள் என்று யாரால் உறுதியாகக் கூறமுடியும்?

முற்றியபின் கனியுதிரும், பழுப்புற்றல் இலையுதிரும். எண்ணெய் வற்றிய பின் விளக்கவியும். இந்த உடல் என்று அவியும் என்று யாருக்குத் தெரியும்! மலர் பறிக்க ஒரு நேரம். வயலிலே நெல்லறுக்க ஒருகாலம். மரமறுக்க ஒரு காலம். ஆனால் நம், உயிர் எனும் கயிறறுக்க காலன் வரும் காலம் எந்தக் காலம்? இப்படியெல்லாம் எத்தனைக் கவிஞர்கள் குத்திக் காட்டிச் சென்றிருக்கின்றனர்கள்.

இவ்வாறு இருக்கின்ற வாழ்வுதனைக் கைநீட்டிக் காட்டி விட்டுத்தான், சிறக்க வாழவேண்டும். சிந்தனையுடன் வாழ வேண்டும். இருக்கும் காலம் வரை இன்னலையூட்டும் நோயின்றி வாழவேண்டும் என்ற அக்கறையை அறிவுள்ளோருக்கு ஊட்டத்தான், தன்னையறியும் அறிவு வந்தபின்,

தன்னையே அர்ச்சிக்கத்தான் இருந்ததாகக் கூறுகின்றார் சித்தர். ஆமாம். அறிவும் செல்வமும், ஆயிரம் ஆயிரமான சேவகரும் ஒருவருக்கிருந்து என்ன பயன்? நோயிலே விழுந்து, பாயிலே புரண்டு, வாய் புலம்பி வழி கலங்கி, மனம் வதங்கிக் கிடப்பவனிடம், என்ன இன்பத்தைக் காண முடியும்? அவனால் பிறருக்கு என்னதான் பயன் கிடைத்து விடும்?

பழந்தமிழ் மற்றும் பிற நாட்டு இலக்கியங்களனைத்தையும் படிக்கப் புகுங்கால், ஆயிரமாயிரம் தெய்வங்கள் இருப்ப தாகவே நாம் அறிந்து கொள்கிறோம். அத்தனை தெய்வங்களை ஏன் மக்கள் கொண்டிருக்கின்றார்கள் என்பதை ஆராயும் போது, மனிதருக்குத் தேவைப்படும் அத்தனை பொருட்களும், தெய்வங்களாக அல்லவா போற்றப்பட்டிருக்கின்றன. ஏற்றப் பட்டிருக்கின்றன.

உணவு சமைக்க உதவிய நெருப்பு ஊரை எரித்தபோது, தாகம் தீர்க்கத் தண்ணீர் வெள்ளமாகப் பெருகி வழியை அழித்தபோது, வாழ உதவும் காற்று வன்புயலாக மாறி அடித்தபோது, குளிரோட்டிய பரிதி, கொடும் அனலாக எரித்தபோது, வாழ்த்திய மக்கள் பயத்தால் வணங்கினர். பயன்பட்டபோது வாழ்த்தினர். பயந்தபோது "காத்தருள வேண்டும்" என்று கைகூப்பி வணங்கினர். அதனால் தான் சூரியபகவான், சந்திரன், வாயுபகவான், வருண பகவான், கங்காதேவி, பூமாதேவி என்றெல்லாம் வணக்கத்திற்குரிய தெய்வங்களாக மாறின. எல்லோருக்கும் கண்கண்ட கடவுள்களாக மாறின.

நம் உடல் மட்டும் எந்த வகையில் குறைந்து போய் விட்டது என்று நினைக்கின்றீர்கள்? போற்றி வாழ்கின்ற வரையில் பொன்னையும், பொருளையும், புகழையும் வாரி வழங்குகின்ற உடல்தான், புண்ணும் நோயும் பெற்ற பிறகு எதை வாங்கித் தருகிறது என்றுதான் நமக்கு நன்றாகத்

தெரியுமே. காற்றாலும், கனலாலும், நீராலும், நிணத்தாலும் போன்ற ஐம்பூதங்களால் ஆக்கப்பட்டிருக்கும் உடல்தான், ஆக்க சக்தி அத்தனைக்கும் அருங்களமாக அன்னை மடியாக விளங்கி வருகிறது. பயன்தந்த அத்தனை பொருட்களையும். நாம் வாழ்த்தி வணங்குகிறோம் என்றால், உலகில் வாழ உதவும் ஒப்பற்ற உடலும், ஓராயிரமுறை நாம் பயன்படுத்திக் கொண்டு இருக்கின்ற நமது உடலும் ஓர் தெய்வந்தானே !

உடலுக்குள் ஓடி.விளையாடும் உயிர்க்காற்று இருக்கும் வரை தான் உடல் செழிக்கும். உள்மனம் தழைக்கும். உறவினம் அழைக்கும். அறிவு முழக்கும். ஆன்மாவும் பிழைக்கும். இத்தனைக் காரியங்களுக்கும் காரணமாக விளங்கிப் பயன்பட்டு. நம்மை பயப்படுத்தி வாழும் உடலை, எந்திரம்போல இயக்கி, ஏவலர் போல இகழ்ந்து விட்டு வாழ்ந்துவிடலாம் என்று வாழமுற்பட்டால், அது வாழ்க்கையில் சேராது. பழகிவிட்டதனாலேயே, நாம் எப்படியும் பழகி விடக்கூடாது என்று பாம்பையும் நெருப்பையும் சிங்கத்தையும், ஆள்கின்ற அரசையும் காட்டிப் பயமுறுத்துவதுபோல பாடிச் செல்கின்ற ஓர் பழம்பாடல்.

அதேபோல நமக்குக் கிடைத்திருக்கின்ற உடலும் நம்மையெல்லாம் நல்லுகத்திற்கு அழைத்துச் செல்லும் நயமான தெய்வமாகும். வாழ்த்தியோர், வணங்கியோர் வாழ்வுபெற்றார்கள், வன்முறையால் தாக்கிப் பேசியோர்கள் வாழ்விழந்து வழியொடுங்கி வீழ்ந்தார்கள். தெய்வம் போற்றித் திருவாழ்வைப் பெறுவோம். செல்லும் வழியில் சீரிய நலமெலாம் பெற்று, உயர்ந்த நிலையை அடைவோம் !

# 10. விளையாட்டுக்களில் விநோதங்கள்!

இந்திய நாட்டு மக்களுக்கு இனிக்கும் செய்தி அது! இதயம் குளிர வந்த செய்தியினைத் தந்தவர்கள் முகம் பார்க்க, பாரதமே ஆவலுடன் எதிர்நோக்கிகொண்டிருந்தது. இங்கிருந்து இங்கிலாந்து சென்ற கிரிக்கெட் குழுவினர், எல்லோரும் பாராட்டும்படி விளையாடி வெற்றி பெற்ற சுவையான சேதிதான், உலக மக்களையே வாயாரப் புகழ வைத்த அந்த வெற்றி, உறவுக்குரிய பாரதத்தாரை எப்படி உணர்ச்சியில் ஆழ்த்தியிருக்கும்?

வெற்றி பெற்ற வீரர்களை ஏந்திக்கொண்டு வந்த விமானம் பம்பாயில் தரை இறங்கியபோது, தரையில் இருந்து கிளம்பிய வாழ்த்தொலியும் வெற்றிச் சிரிப்பும் விண்ணைக் குடைந்தது. வாய்வலிக்கும் அளவுக்கு வாழ்த் தொலி எழுப்பினர் பலர்; வசதியுள்ளவர்கள் மாலை சூட்டி மகிழ்ந்தனர். விளையாட்டில் வேகமும் வெறியும் உள்ள வர்கள் மோதிரமே அணிவித்து மனநிறைவு பெற்றனர்.

இவ்வாறு இருந்தவர்கள் எல்லோரும் இன்ப வெள்ளத்தில் மூழ்கியிருந்தபோது, விநோதமான ஓர் விளம்பர அறிவிப்பு அங்கே எழுந்தது.

“கீர்த்தியையும் நாட்டுக் கௌரவத்தையும் வெற்றிப் பரிசாகக் கொண்டு வந்த கிரிக்கெட் வீரர்களுக்கு ஓராண்டு முழுவதும் ‘கோகோ கோலா’ எவ்வளவு தேவையோ அவ்வளவையும் இலவசமாக அளிக்கிறோம்.”

எல்லோரும் ஆரவாரத்துடன் வரவேற்றனர். இது போன்ற விநோதம் இந்த காலத்துக்கு மட்டும் சொந்தமல்ல. அந்தக் காலத்தில் இருந்தே தொடர்ந்து தான் வந்து கொண்டிருக்கிறது. உடையால், நடையால்தான் மக்கள் மாறலாமே தவிர, உணர்வால் செயலால் எல்லாக் காலத்திலும் ஒன்றாகத் தான் வாழ்கின்றனர். வாழ்ந்திருக்கின்றனர்.

1896ஆம் ஆண்டு புதிய ஒலிம்பிக் பந்தயம், பல பிரச்னைகளுக்கிடையே முதன் முதலாகக் கிரேக்க நாட்டிலே தொடங்கப்பெற்றது. கிரேக்கர்களை எல்லா விளையாட்டுப் போட்டிகளிலும் வல்லவர்கள், வெற்றியைப் பெறுகின்ற ஆற்றல் உள்ளவர்கள் என்று கிரேக்க மக்கள் அனைவரும் மனக்கோட்டைக் கட்டி மகிழ்ந்திருந்தனர். ஆனால் நடந்ததோ வேறு. அமெரிக்காவும் மற்ற நாடுகளும் வெற்றி மேல் வெற்றி பெற கிரேக்கம் தோல்வி மேல் தோல்வியைத் தழுவிக் கொண்டிருந்தது.

தோல்வியை கசப்புடன் தாங்கிக்கொண்ட கிரேக்கர்களின் நம்பிக்கைக்கு இன்னும் ஒரே ஒரு நிகழ்ச்சிதான் உயிரூட்டிக் கொண்டிருந்தது. அதுதான் மாரத்தான் ஓட்டம். 26 மைலுக்கு மேல் ஓடுகின்ற நெட்டோட்டம். ஆற்றலில் நம்பிக்கை கொண்டு அகம்பாவம் உற்றிருந்த அவர்கள், வெற்றிக்காக ஆண்டவனைத் தொழத் தொடங்கி விட்டனர். இதிலாவது வெற்றி பெறாவிட்டால், கிரேக்கத்தின்

கம்பீரம் பண்டைய வீரம், விளையாட்டுப் போட்டிகளில் வைத்திருந்த விவேகம் எல்லாம் என்ன ஆவது ?

மாரத்தான் ஓட்டம் தொடங்கிவிட்டது. மனதை அழுத்திப் பிடித்துக் கொண்டு முடிவுக்காக மக்கள் காத்திருக்கின்றனர். முடிவு—லூயிஸ் என்ற இளைஞனே கிரேக்கத்தின் மானத்தைக் காப்பாற்றினான். மன்னரே எதிரே ஓடிவந்து மார்புறத் தழுவிக்கொண்டு தன் மட்டற்ற மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டார்.

ஆடு மேய்க்கும் இளைஞனாக இருந்தவனின் அற்புத ஆற்றலை, ஆண்மையை அகில உலகமே புகழ்ந்து கொண்டிருந்த நேரம்; அந்தக் கூட்டத்தை நோக்கி மூன்று பேர் ஓடி வந்தனர், மானம் காத்த மாவீரனைக் கண்டவுடன், அவர்கள் சத்தமிட்டுக் கூறிய விநோத அறிவிப்பு அத்தனை பேரையும் ஆச்சரியத்தில் ஆழ்த்தியது,

நாட்டின் கௌரவத்தையும் கீர்த்தியையும் காத்த லூயிசின் வாழ்நாள் முழுவதும் இலவசமாக முடி திருத்தி அலங்காரம் செய்வேன் என்றார் ஒருவர். அழகான ஆடைகளை ஆயுட்காலம் முழுவதும் வழங்குவேன் என்றார் இன்னொருவர். அவர் ஒரு துணிக்கடைக்காரர். மற்றவர் கூறினார் ? மனதுக்குப் பிடித்தமான சுவையான உணவை அவருக்குத் தருவேன் என்றார். அவர் ஓட்டல்காரர்.

தாய்நாட்டின் வெற்றிக்காக தொண்டாற்றியவர்களைப் பாராட்ட வந்த அந்த விநோத அறிவிப்பு எப்படி ?

இவ்வாறு வரலாறு புகழும் சிறப்பைத் தருகின்ற வெற்றியை, நியாயமான வழியிலே பெறுவோரும் உண்டு. தகுதியற்ற சிலர், வெற்றி பெற வேண்டுமென்று தகாத வழிகளை, முறைகளையெல்லாம் பின்பற்றுவதும் உண்டு.

தகுதியும் திறமையும் அறிவும் புகழும் உள்ள அறிஞர்களுக்கும் பெரியவர்களுக்கும் சில எதிர்ப்புகளை நாம் கேள்விப்

டட்டிருக்கிறோம்; கண்கூடாகக் கண்டுகொண்டிருக்கிறோம். ஆனால், முறையற்ற வழியில் சென்றவர்களுக்கும் கூட சிலை யெடுத்த விநோதத்தையும் சரித்திரம் நமக்குச் சாற்றுகிறது.

முன்னாள் ஒலிம்பிக் பந்தயங்களில் கலந்து கொள்ளும் கிரேக்க வீரர்கள், வெற்றி பெறுவதற்காகத் தவறான முறைகளைப் பின்பற்றினால் அவர்களுக்குத் தண்டனை அபராதம் மட்டுமல்ல; அவர்களைப் போலவே சிலையமைத்து, பந்தயக்களத்தின் தலை வாசலிலே நிறுத்தி, அவமானப் படுத்துவார்கள். அவமானப்படுத்துவதால் மட்டும் அக்கிரமம் மறைந்து விடுகிறதா ?

வெற்றி தான் வேண்டும் என்ற முடிவுக்கு வந்து விட்டால், மானம், மனிதப் பண்பு அத்தனையும் அல்லவா உடனே மறைந்து போகிறது! பதவியும், பணமும் முரட்டுத்தனமும் சேர்ந்துகொண்டு எதிரிகளை அடக்கிவிடு கின்றனவே. இந்த அற்பக் குணம் சாதாரண மக்களிடந் தான் இருக்கிறதா என்றால், சாம்ராஜ்யத்தை ஆளுகின்ற சக்கரவர்த்தியிடங்கூட இருக்கிறது என்று அறியும்போது, எங்கிருந்தாலும் 'மனிதன் மனிதன்தான்' என்று எண்ணவே தோன்றுகிறதல்லவா !

கால் பந்தாட்டப் போட்டி ஒன்று நடந்து கொண்டிருக் கிறது. அதில் போலீஸ் இன்ஸ்பெக்டர் ஒரு குழுவிலும், அவரின் கீழ் பணியாற்றும் போலீஸ் எதிர்க் குழுவிலும் ஆடிக் கொண்டிருக்கின்றனர். இன்பெக்டரின் முகம் கோபத்தால் அடிக்கடி மாறுவதை போலீஸ்காரர் பார்த்து விடுகிறார்.

இலக்குக் காவலராகப் பணியாற்றும் அந்தப் போலீஸ், தன்னை நோக்கிப் பந்துடன் வரும் இன்ஸ்பெக்டரைத் தடுக் காமல் உத்தியோக பாணியில் 'சல்யூட்' அடித்து நிற்கிறார். பந்து இலக்கினுள் நுழைகிறது, இன்ஸ்பெக்டர் வெற்றி பெற்ற ஆனந்தத்தில் பூரிப்படைகிறார்.

இந்தக் கதை உண்மையோ, கற்பனையோ நமக்குத் தெரியாது. எல்லோரும் பேசி மகிழ்கின்ற விநோதமான நிகழ்ச்சி என்றாலும், இது போன்ற உண்மை நிகழ்ச்சி இல்லாமல் இல்லை. சாதாரணமானவர்களின் கதையைக் கேட்டோம். சக்கரவர்த்தி செய்த அக்கிரமத்தைக் கேளுங்கள்.

ரோம் சாம்ராஜ்யத்தை ஆண்ட நீரோ, நமக்கெல்லாம் நன்கு அறிமுகமானவர்தான்; ரோம் எரியும்போது பிடில் வாசித்த நீரோ என்பவரும் இவரேதான், இவருக்கு ஒலிம்பிக் பந்தயங்களில் வெற்றிவீரராக வர வேண்டும் என்ற ஆசை வந்துவிட்டது. அதற்காக, தன்னுடன் போட்டிகளில் கலந்துகொள்ள 5000 ஆட்களை அழைத்துச் சென்று தன்னுடன் போட்டியில் பங்கு பெறச் செய்தார்! பிறகென்ன? அவர் போட்டியிட்ட அத்தனைப் போட்டிகளிலும் அவரேதான் வெற்றி வீரராக வந்தார். அதற்கு இதோ ஒரு சான்று.

தேரோட்டும் பந்தயப் போட்டியில் கலந்துகொண்டார் நீரோ! அவருடன் போட்டியிட்டவர்கள் அவரது அடியாட்கள்தானே! பாதி வழியில் வந்து கொண்டிருந்தநீரோ, தேரிலிருந்து தவறி கீழே விழுந்து விடுகிறார். பின்னால் வந்து கொண்டிருந்த அத்தனைப் போட்டியாளரும், வேகமாகத் தேரை ஓட்டிக்கொண்டு போக வேண்டியதுதானே முறை! அப்படிச் செய்தால் அவர்கள் கதி என்னாவது? புறப்படுகின்ற வரைக்கும் எல்லோரும் நின்றுகொண்டேயிருந்தனர். நீரோ தேரை ஓட்டிச் சென்று எல்லையை முதலாவதாக அடைந்து வெற்றிப் பரிசை தட்டிச் செல்கிறார்! விநோதமான வெற்றிப் பரிசல்லவா!

இப்படி நடக்கின்ற விநோதங்கள் வெற்றிக்காக மட்டுந்தான் நடக்கும் என்பதல்ல. விளையாடுவோரிடத்திலும் நடக்கும். வேடிக்கைப் பார்க்க வருகின்றவர்களிடங்கூடத்

தான் நடந்திருக்கிறது, விளையாட்டு என்றாலே உணர்ச்சியான செயலுக்காகத்தானே! எதுவும், எப்பொழுதும், எப்படியும் நிகழும் என்ற உலக இயல்புக்கு ஏற்பவே ஆடுகளமும் அமைந்திருக்கிறது.

1964ஆம் ஆண்டு டோக்கியோவில் ஒலிம்பிக் பந்தயம் நடந்தது. அதில் பங்குபெற 'வீராஒசாலினே' எனும் வீராங்கனை ரஷ்யா நாட்டிலிருந்து வந்திருந்தார். அவர் 1960ஆம் ஆண்டு நடந்த ஒலிம்பிக்கில் வேலெறியும் போட்டியில், தங்கப்பதக்கம் பெற்றவர். இந்தப்போட்டியிலும் வெற்றி பெற்று விடுவோம் என்ற நம்பிக்கையில் தான் வந்திருந்தார். ஆனால் நடந்தது வேறு! அவர் 5-வது இடத்தையே அடைந்தார். அந்த அவமானத்தை அவரால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. பந்தயக் களத்தைவிட்டு வேகமாக ஓடினார்! எங்கே! முடி அழகு திருத்த நிலையத்திற்குத்தான்! தன் கருங்கூந்தல் அனைத்தையும் களைந்தெறிவதற்குத்தான்! மொட்டை அடித்துக்கொண்டால் பட்ட வேதனை குறையுமோ என்னமோ தெரியவில்லை.

இவ்வாறு, விளையாட்டுக்களில் விநோதங்கள் நிகழ்ந்து கொண்டுதான் இருக்கின்றன. என்றாலும் நாம் விளையாட்டில் ஈடுபட்டு மகிழ்கிறோம். நமக்குத் தேவை இன்பந்தானே!

# 11. உலகம் காக்கும் உயிர்க் கல்வி

அழுதுகொண்டே பிறந்து, அழுதுகொண்டே இறக்கும் மனித இனம், வாழ்க்கை முழுதும் சிரித்துக்கொண்டே வாழ வேண்டுமானால், வளம் நிறைந்த உடலும், நலம் நிறைந்த உள்ளமும் இணைந்து அமையப் பெற்றிருக்க வேண்டும்.

பணியும் பகுத்தறிவும், பண்பாடும், பாரில் பெருமையையும் புகழையும் அளிக்கிறது என்ற நிலைமாறி, குறையாத பொருள் வளமும் குன்றாத நல உரிமையுமே மக்களால் ஏற்றிப் போற்றப்படுகின்றது. எனவேதான் "பணம்பத்தும் செய்யும்" என்று பேசிப் பேசி பணத்தை ஈட்டுவதற்கு முயன்று, பணத்துடன் கவலையையும் மற்றுமுள்ள நோய் வகைகளையும் ஒன்றாக ஈட்டி, வாழ் நாள் முழுதும் துன்பத்துடன் போராடிக் களைத்து, களையிழந்து மடிகின்றனர்.

செல்வத்தைச் சேகரிக்க முயன்ற இன்னலைவிட, அதைக் காப்பதற்காகப் படுகின்ற தொல்லை. அதற்காகச் சிந்திக்கின்ற நேரம் இவைகளைக் கணக்கிட்டால், வாழ்க்கையில் அவர்கள் தங்களுடைய உடலைப்பற்றி சிந்திக்கின்ற நேரம் சிறிதளவுதான்.

ஆளுகின்ற அரசன் எப்பொழுது அயருவான், அந்த நாட்டில் குழப்பங்களை உண்டு பண்ணிக் கைப்பற்றலாம். என்று கொக்கென ஏங்கி நிற்கும் பகையரசன் போல, உடலைக் காப்பாற்றும் அணுக்களை நோய்தரும் அணுக்கள் நெருங்கிக் கொண்டிருக்கின்றன. எனவே, நாம் களைக்கும் நேரம். நம்மைக் கவ்விக் கொள்ள நோய் கூட்டம் எப்பொழுதும் காத்துக் கிடக்கின்றன.

பூத்துக் குலுங்கும் புது மலர்ச் சோலையாக வாழ்க்கை அமையப் பணத்தை ஈட்டப் போய், நோய்களையும் கவலைகளையும் சுமந்து திரிகின்ற காட்சி, குளிக்க போய்ச் சேற்றைப் பூசிக்கொண்டு வந்த கதையாகத்தான் இருக்கிறது.

ஆகவே, வரும் துயரை முன்னறிந்து காப்பதே அறிவுடைமை. வந்த பின் காப்பது செத்த பிணத்திற்கு பூமாலை சூட்டுவது போலாகும். அணையை வெள்ளம் வருவதற்கு முன் கட்டவேண்டும். அந்த அணையாக, அருமை வழிகாட்டும் துணையாக இன்று நமக்குக் கிடைத்திருக்கும் ஊன்றுகோல்தான் உடற் கல்வியாகும்.

உடலும் உள்ளமும் ஒன்றுக்கொன்று உறுதுணையாக, ஒன்றின் உயர்விலே தானும் உயர்ந்து, தாழ்ந்த நேரத்திலே தாழ்ந்து இணைபிரியாத நிலையிலே இயங்கி வருகின்றன. நோய்வாய்ப்பட்டு நொந்து கிடக்கும் மனிதன், நொடிப் பொழுதேனும் நிம்மதியாக இருப்பதில்லை. உள்ள வேதனையடைந்தவனோ உடலை மறந்து இன்னும் உலகையே மறக்கும் நிலைக்கு வந்து விடுகிறான்.

எனவே, உடற் கூடும் அந்தக் கூட்டிலே குடியிருக்கும் உள்ளமும் வளமும் நலமும் பெற, உடல் திறனோடு மனிதன் வாழவேண்டும். ஒவ்வொரு மனிதனும் 'உடல் திற நிலையோடு உளநலமும் பெற்று சிறப்புற வாழ வழி வகைகளைக் கூறி, அதற்கான வாய்ப்புகளையும் வழங்குகிறது உடற்கல்வி

வாழ்க்கையின் அடிப்படையே அசைவு தான், ஆவி நீத்தவன் ஒருவனே அசைவின்றிக் கிடக்கிறான். இயங்காத இயந்திரத்தின் உறுப்புக்கள் எவ்வாறு மழுங்கி, எவ்வாறு பழுதாகிப் பணி செய்யாது பலனற்றுப் போகிறதோ, குடியில்லாத வீடு எவ்வாறு குப்பைமேடாக மாறுகிறதோ, அதே போலத்தான் மனித உடலின் உறுப்புக்களும் உழைப்பால் வளருகின்றன. உறுதியடைகின்றன, ஓய்ந்து கிடக்கும் உறுப்புக்கள் ஒடுங்கி உபயோகமற்றுப் போகின்றன என்பதை யாருமே அறிவர். ஆகவே, என்றும் உறுப்புகளுக்கு நாம் இயக்கம் அளிக்க வேண்டியது அவசியமாகிறது.

இயங்கும் உறுப்புக்கள் இயன்றவரை இயங்கிக் களைத்த பின்னர். காணும் ஓய்விலும் அமைதியிலும் பெறுகின்ற இன்பத்தை சொல்வதால் உணர முடியாது. அதை அனுபவிப்பதால்தான் அறிய முடியும். உடற்கல்வி அத்தகைய இன்பத்தை அளிக்க வல்லதாகும்.

ஆனால், நம் நாட்டில் உடற் கல்வியைப் பற்றி எத்தனையோ கருத்து வேறுபாடுகள் உலவி வருகின்றன. அதன் சேவை சிறிதுதான் என்பாரும், தேவையே இல்லை என்று தாக்கிப் பேசுவோரும், படிப்பு இதனால் பாழாகிறது என்போரும் (தானே அவ்வாறு ஆனவர் போல), இதிலே என்ன இருக்கிறது என முற்றும் உணர்ந்தவர் போல) கேள்விக் குறியை வீசி விட்டு கைதட்டுகளைப் பெறுபவர்கள் இருக்கின்ற நிலையிலே, சிறக்கின்ற கல்வியும் தாயற்ற மழலை போலத் தத்தளிக்கிறது.

உடற் கல்வியின் பெருமையை உலகம் உணர்கிறது. போற்றுகிறது, அதன் கொள்கைகள் உலகினம் சிறக்க உயர்ந்த வளம் கொழிக்க, சிந்தை இன்பத்தால் செழிக்க பாடுபடுகின்றன. இதன் பணியை எல்லா நாடுகளும் போற்றினாலும்; நம்மவர் அதனை உணர மறுக்கின்றனர். உணர்ந்தாலும் ஏதோ சில காரணங்களைக் கூறி வெறுக்கின்றனர். அறிவியலால் ஆக்கமும் அழிவும் உண்டு என்றாலும், அதன் நிறையை அவர்கள் போற்றுவது போல, குற்றம் நாடுவது போல குணத்தை நாடவும் அவர்கள் தலைப்படவேண்டும். மாற்றாந்தாய்ப் பிள்ளையைப் போல உடற் கல்வி ஒதுக்கப்படுவது. மனித குலத்திற்கே தீங்கினை வழங்குவதாகும்.

குடியரசு எல்லோராலும் வரவேற்கப்படுகிறது. ஆனால் குடியரசு சில நேரத்தில் தடியரசாவதையும் பிறகு முடியரசாவதையும் இன்று நாம் காண்கிறோம். ஆனால் குடியரசே வேண்டாமென்பவருக்கு முழுமன வளர்ச்சி யில்லையென்று கொள்ளலாமே தவிர, குடியரசு நடைமுறைக்கு உதவாதது என்று சொல்லக்கூடிய அளவுக்கு நாம் செல்லக்கூடாது.

குடியரசு எங்கும் போற்றப்படுகின்ற இந்த நேரத்தில் குடியரசில் ஒவ்வொரு தனி மகனையும் குடியரசின் குடிமகனாக, சிறந்த மகனாக ஆக்கும் பணியை உடற் கல்வி தன் கொள்கையால் வெற்றிகரமாக மேற்கொண்டிருக்கிறது என்றால் அது எல்லோருக்கும் வியப்பாகத்தானிருக்கும். இனி அதன் பணியைக் காண்போம்.

மக்களால் மக்களுக்காக ஆளப்படும் ஆட்சியே குடியரசாகும். மக்களாட்சியின் முதல்படியானது சமநிலையாகும். நாட்டில் பிறந்த ஒவ்வொரு குடிமகனும் சமத்துவத்தை சரி நிலையினை அடையும் வாய்ப்பினை ஏற்படுத்திக் கொடுப்பதே குடியரசின் நோக்கமாகும். எல்லா மக்களும் சமமாகவே படைக்கப்பட்டிருக்கிறார்கள். அது போலவே உடற் கல்வி

யின் நோக்கம் ஒவ்வொருவருக்கும் அவனுக்குரிய வாய்ப்பைக்கொடு" என்பதே மூல வாக்காகும். வயது, பால், இனம், சாதி, மதம், தேசம், பொருள் இவைகளுக்கு அப்பாற்பட்ட நிலையிலே வேற்றுமை பாராட்டாது, திறமை மிகுந்தவர்க்கே முதலிடம் அளித்து, அவர்களைப் பின்பற்றி மற்றவர்கள் பழகிப் பங்கு பெறும் வாய்ப்பை ஏற்படுத்தித் தருகின்றது. ஏழை என்பதாலோ தாழ்ந்தவன் என்பதாலோ, எவரும் விளையாட்டில் பங்கு பெற மறுக்கப் படுவதுமில்லை. வெறுக்கப் படுவதுமில்லை.

"ஒற்றுமைக் களமாக, உயர்ந்த எண்ணங்களை விளைவிக்கும் நிலமாக பயன்படுவது ஆடுகளமாகும்." ஒவ்வொருவரும் தன் திறமையைக் காட்டச்சிறந்த வாய்ப்பையும் அளிக்கிறது இக்கல்வி.

வாழு, வாழ விடு என்பதன் அடிப்படையே குடியரசு ஆகும். தானும் வாழவேண்டும் பிறரும் வாழ உதவவேண்டும். தான் பெற்ற இன்பம் பிறரும் துய்க்கவேண்டும் என்ற பெரும் நோக்கங்கள் நடைமுறையிலே உலவுகிறது. ஆடுகளத்திலே இந்நிலை பெறப் பரந்த உள்ளமும் விரிந்த நோக்கமும் தேவை. அப்பண்பாட்டை வளர்க்கிறது உடற் கல்வி.

விதிகளுக்குக் கட்டுப்பட்டு விளையாடவேண்டிய கட்டாய நிலை, விதியோடு விளையாடினால் தான் வெற்றியும் பெருமையும் கிட்டும் என்பதால், ஒரு கட்டுக்குள் அடங்கி நடக்கும் தன்னடக்கம். பலர் சேர்ந்து ஒரு குழுவாகி எதிர்க்குழுவோடு ஆடும் பொழுது, தன் குழுவிலே தனக்கு எதிரி ஒருவன் இருந்தாலும் அவனோடு ஒத்துழைத்து ஆடினால்தான் தன் குழு வெற்றிபெறும் என்ற நிலை வரும்போது உள்வேற்றுமையை மறந்து பொதுநலத்திற்காக ஒன்றுசேரும் தன்மை, குழுத் தலைவனுக்கு அடங்கி நடத்தல்; தன் கீழ் பலர் அடங்கப்

பணியாற்றும் தலைமைத் தலைவன் வழி நடத்துதல்; வெற்றியும் தோல்வியும் வீரனுக்கு அழகு என்று எண்ணித் தோற்ற பின் சிரிப்பதும்; வெற்றி பெற்ற பின் தற்பெருமைக் கொள்ளாத தகைமையும் விதிகளுக்கு அடங்கி நடுவர்களுக்குக் கட்டுப்பட்டு நல்ல பல செயல்களை ஆற்றும் பேராண்மை, முதலிய பண்புகளை இடைவிடாது ஊட்டிவளர்த்து ஒவ்வொருவருக்கும் தனி நிலைப் பண்பாட்டை விளக்கிப் பெருக்கி சிறந்த மகனாக ஆக்குகிறது உடலியற் கல்வி.

களிப்பு மனித வாழ்க்கையின் இலட்சியமாகும். ஒரு சமூகத்தின் வளர்ச்சியை மதிப்பிடக் களிப்புதான் அளவு கோலாகப் பயன்படுகிறது. நிறைந்த செயல்களிலும் நிம்மதியான வாழ்க்கையிலும்தான் களிப்பு ஏற்படுகிறது. இவ்வாறு களிப்பு மிகுந்த வாழ்க்கையில் வெற்றியும் தோல்வி யும் பொலிவும் நலிவும், ஒளியும் இருளும், ஒப்பாரியும் தாலாட்டும் மாறி மாறி எழுந்தாலும்; இதுதான் வாழ்வின் உண்மை எனத் தெளிந்து கலங்காது வாழ்கின்ற மனத் திண்மையை அளிக்கிறது உடற்கல்வி.

'எது நேர்ந்தாலும் ஏற்றுக்கொள்ளும் நெஞ்சம் இன்னல்களையும் இடர்ப்பாடுகளையும் கண்டு இளநகை புரியும் வலிமை, தன் திறத்தில் நம்பிக்கையும் சூழ்நிலைகளின் தன்மை யையும் புரிந்துகொண்டு மகிழ்வால், கேளிக்கைகளால் இன்பத்தால், கோபத்தைச் சோகத்தைத் தகர்த்தெறியும் சக்தியை உடற் கல்வி உடலுக்கும் உள்ளத்திற்கும் அளிக்கிறது.

தனி மனிதன் தன்னுடைய உரிமையையும் பிறரது உரிமைகளின் நிலையைப் புரிந்துகொண்டு தன் நலம் நீக்கிப் பொதுநலப் பணியோடு வாழ்ந்து களிப்படைவது தான் குடியரசின் நோக்கம். இத்தகைய அரும் பணியை உடற் கல்வி ஆடுகளத்தினுள் செய்து கொண்டுதான் வருகிறது.

ஆகவேதான், இன்றைய நிலையில் தேவையானது உடற் கல்வியின் உற்ற துணையே. சுவரை வைத்தே சித்திரம். பாதை அமைத்த பின்னே பயணம். உடலை வைத்தே உயிர்ப் பாதுகாப்பு. நல்ல மக்களை நலமுள்ள வலிவுள்ள வீரர்களைப் பெற்ற பின்பே நாட்டின் பாதுகாப்புக்கு முயற்சி.

உடல் வலிவற்றவர்களுக்குப் போர்ப் பயிற்சி உபயோக மற்றது. கோழையின் கையில் படையும், குரங்கின் கையில் கொள்ளியும் எவ்வாறு ஆபத்தை விளைக்குமோ அதே நிலை தான் நலிந்தவர்களுக்கு இராணுவப் பயிற்சி.

எனவேதான், உடலைத் திறநிலைக்குக் கொண்டு வரவும். உள்ளத்தைப் பக்குவப்படுத்தி விரிந்த நோக்கத்தை உண்டாக்கவும், ஒற்றுமை, கூட்டுறவு, தன்னம்பிக்கை, பொதுநலப் பணி முதலிய பண்புகளைப் பெறவும் உதவுகின்ற உடற் கல்வியை செழிப்புள்ளதாக்கி, அதன் மூலம் சிறந்த மக்களைப் பெற்று நாட்டையும் நாட்டு மக்களையும், காப்பது அரசினர் கடமை.

உலகம் போற்றுகின்ற உயர்ந்த கல்வியை, உயர்ந்த குறிக்கோளைப் பெற்று இலங்குகின்ற சிறந்த கல்வியை, குடியரசின் நோக்கத்தை நடைமுறையில் மறைமுகமாக செய்து வருகின்ற ஒப்பற்ற கல்வியை, அதன் பெருமையை போற்றுவதோடு நில்லாமல், அதன் வளர்ச்சிக்கு வாழ் வமைத்து வழியமைத்துத் தருவது நாட்டுப் பற்றுள்ள ஒவ்வொருவரின் கடமையாகும்.

# 12. வழிகாட்டும் விளையாட்டு

வாருங்கள் விளையாடி மகிழ்வோம்! இன்ப
வழிகாட்டும் விளையாட்டை நீரும் ஆடிப்
பாருங்கள்! பலகோடி மக்கள் பெற்றார்!
பலநூறு ஆண்டுகளாய் ஆடி இன்பம்!
சேருங்கள் அவர் வழியில்! சேர்ந்து ஆடித்
தீருங்கள் மனத்துன்பச் சுமையை எல்லாம்!
நீருங்கள் வாழ்வினிலே நினைத்திடாத
நிம்மதியைப் பெறவேண்டின் துணையாய் கொள்க.

விளையாட்டைப் பாடுகின்றேன்! வாழ்வில் நம்மை
விதியோடு வழிநடத்தும் என்பதாலே!
விளையாட்டைத் தேடுகின்றேன், தினமும் நம்மை
விழிப்போடு காத்திருக்கும் என்பதாலே?
விளையாட்டை ஆடுகின்றேன் மனதில் இன்பம்
விளைகின்ற வயலாக்கும் என்பதாலே!
வளைகின்ற உடல் தம்மை வைரமாக்கி
வழிகாட்டும் சுவை ஊட்டும் என்பதாலே!

ஆண்டவனை விளையாட்டுப் பிள்ளை என்றே
அனைத்துலக இலக்கியங்கள் அழகாய் சொல்லும்.
ஆண்டிமுதல் அமைச்சர் வரை ஆண்பெண், பிஞ்சு
அரைக்கிழங்கள் முழுக்கிழங்கள் எல்லாம், நெஞ்சில்
மூண்டெழுந்த விளையாட்டு உணர்ச்சியாலே
முன்னெழுந்து விளையாடி மகிழ்ந்து வாழ்ந்த
நீண்டெழுந்த வரலாற்றை நினைவில் கொள்வோம்!
நிலையில்லா இவ்வுலகில் நிலைதான் ஈதே!

அழியாத பொருள் ஒன்றைப் படைக்கும் ஆசை
ஆண்டவனைப் பிடித்தாட்ட, அவனும் வந்து
எழிலான உயிர்ஒன்றைப் பிடித்தான். எங்கும்
இணையில்லாத உடலுள்ளே இணைத்தான். நல்ல
மொழிபேசும் வல்லமையைக் கொடுத்தான். நாளும்
முழுவாழ்வைப் பெறுவதற்கு இதயம் தந்தான்.
அழியாத பொருள் ஒன்று புகழேஎன்று
ஆண்டவனே அறிந்தான். பின் மனிதன் வந்தான்.

முகத்தினிலே தனியழகு; மேனி எங்கும்
முடியில்லாத கனியழகு; விரல் முகத்தில்
நகத்திருக்கும் மெருகழகு; இரண்டே காலால்
நடக்கின்ற நடையழகு; கோரைப் பற்கள்
மிகநீண்டு தேய்ந்தழிந்து மென்மை யாகி
வெண்மையுடன் வாயழகுக் காட்ட வைத்தே
இகவாழ்வில் விலங்கினத்தில் பிரித்தான் நம்மை!
இறைவனுக்கு எவ்வளவு வேலை பாரீர்!

உருண்டோடும் உலகினிலே பிறந்தோம்! எண்ண
உணர்வோடும் நிலையினிலே மகிழ்ந்தோம்! இன்பம்
திரண்டோடும் வாழ்வினையே நினைத்தோம்! வாசல்
திறந்தோடும் ஆசையிலே நனைந்தோம்! தோற்று
மருண்டோடும் நேரமெல்லாம் குமைந்தோம்! நெஞ்சை
மறந்தோடும் வழிகாண முனைந்தோம்! ஆனால்
பருந்தோடு நிழல்போல துன்பம் சேர்ந்து
பறக்கையிலே நம்வாழ்வு சிறப்ப தெங்கே?

சிரிக்கின்றோம்! சிந்தனையில் தேகம் துள்ள
சிலிர்க்கின்றோம்! கற்பனையின் சிறகு தம்மை
விரிக்கின்றோம்! வந்துவிடும் இனிமை எண்ணி
விளிக்கின்றோம் சொந்தமென மனதுக் குள்ளே
வரிக்கின்றோம்! விந்தைமிகு வாழ்வு தனில்
விழிக்கின்றோம்! ஆறறிவை வைத்துக் கொண்டு
இருக்கின்றோம் மனிதரென! மனித ராக
இருப்பதற்கு நாம்செய்த முயற்சி என்ன?

ஒற்றையடிப் பாதையென ஒடுங்கும் நெஞ்சம்!
உச்சிவெயில் நிழலாகக் குறுகும் எண்ணம்!
கற்றைமுடிக் குழலாக சிக்கும் நெஞ்சம்!
கட்டவிழ்ந்த காளையெனக் குதிக்கும் எண்ணம்!
குற்றுயிரில் புழுபோலத் துடிக்கும் நெஞ்சம்!
குளத்தினிலே எருமையெனக் கலக்கும் எண்ணம்
பற்றோடும் பணத்தோடும் பதவி யோடும்
பதைபதைத்தே தினந்தோறும் தேய்கின்றோம் நாம்

பசியென்றால் ருசியறியும் நாக்கு! பாசப்
பரிவென்றால் வழியறியும் நெஞ்சு! நல்ல
இசையென்றால் தான் திரும்பும் காது! காலை
இளப்பரிதி தனிலரும்பும் 'போது'! வீசும்
திசையோடு நின்றாடும் பட்டம்! பூசும்
திறத்தோடே கொண்டாடும் தேகம்! என்றும்
விசையோடு வாழ்க்கையிலே வாழ வேண்டும்!
விளங்காமல் நோய் சுமந்தே வாழ்கின்றாரே!

பட்டமரம் நிழல்தருமோ ! திரிந்து போன
　　பால்தனிலே தயிர்வருமோ ! சேற்றில் வீழ்ந்து
விட்டமலர் மணந்தருமோ ! எண்ணெய் தீர்ந்த
　　விளக்கினிலே ஒளிவருமோ ! வெம்பி வீழ்ந்து
கெட்டகனி சுவைதருமோ ! கிடையா தென்றல்
　　கீழாக்கிப் பாழாக்கும் நோய்க்குள் வீழ்ந்து
விட்டஉடல் வாழ்வினிலே தருவதென்ன ?
　　விளையாட்டே உடல்காக்கும் ! உணர்வார் யாரோ?

காவிரியின் பசுமையெல்லாம் நீரோட்டத்தால் !
　　கற்பனையின் இசையெல்லாம் கண்ணோட்டத்தால் !
பூவிரிக்கும் புதுமையெல்லாம் தேனூட்டத்தால் !
　　பொன்விரிக்கும் பெருமையெல்லாம்
　　　　　　　　மண்ணூட்டத்தால் !
பாவிரிக்கும் இனிமையெல்லாம் சொல்லூட்டத்தால் !
　　பயன்விளக்கம் செயல்எல்லாம் பண்பூட்டத்தால் !
நாவிரிக்கும் நன்மையெல்லாம் விளையாட்டாலே !
　　நல்லமைதி வாழ்வூட்டும் உடல்ஊட்டத்தால் !

காற்றென்றால் உயிர்காக்கும் மூச்சாய் நின்று !
　　கனியென்றால் பசிதீர்க்கும் உணவாய் சென்று !
ஊற்றென்றால் துயர்போக்கும் தாகம் வென்று !
　　உரமென்றால் பயிர்வளர்க்கும் உள்ளாய் நின்று !
நேற்றின்று நாளையென நினைவில் கொண்டு
　　நிலையான நல்வாழ்வை மக்கட் கீய
தோற்றந்தான் கொண்டதுவே விளையாட் டெல்லாம் !
　தொட்டார்க்கும் தொடர்ந்தார்க்கும் சொர்க்கமீதே !

எஸ். நவராஜ் செல்லையா

# ஆசிரியரின் பிற நூல்கள்

8ம் பக்கத்தின் தொடர்ச்சி

கிரிக்கெட் ஆட்டத்தின் கதை
கிரிக்கெட் ஆட்டத்தில் கேள்வி—பதில்
மென் பந்தாட்டம்
பூப் பந்தாட்டம்
வளையப் பந்தாட்டம்
நீங்களும் மகிழ்ச்சியாக வாழலாம்
நீங்களும் நோயில்லாமல் வாழலாம்
விளையாட்டு உலகில் வீரக் கதைகள்
வழிகாட்டும் விளையாட்டு வீரர்கள்
விளையாட்டு உலகில் சுவையான சம்பவங்கள்
பொழுதுபோக்கு விளையாட்டுக்கள்
வாழ்க்கைப் பந்தயம்
ஒலிம்பிக் பந்தயத்தின் கதை
விளையாட்டுகளுக்குப் பெயர் வந்தது எப்படி ?
விளையாட்டுத்துறையில் சொல்லும் பொருளும்
விளையாட்டுத்துறையில் ஆங்கிலம்—தமிழ் அகராதி
விளையாட்டுக்களின் வழிமுறைகளும் வரலாறும்
General Knowledge In Sports And Games
How To Break Ties In Sports And Games
Quotations On Sports And Games
நல்ல பாடல்கள்
நல்ல நல்ல கதைப் பாடல்கள்
நவனின் நாடகங்கள்
நவரச நாடகங்கள்
மாணவர்க்கேற்ற மேடை நாடகங்கள்
சுவையான நாடகங்கள்
வேஷங்கள் விளையாடுகின்றன
மனைவியுடன் மகிழ்ச்சியாக வாழ்வது எப்படி ?



திரு எஸ். நவராஜ் செல்லையா அவர்கள் தமிழ் இலக்கியத்தில் விளையாட்டுத் துறை நூல்கள் அதிகமாக வெளிவர வேண்டும் என்ற முயற்சியில் இதுவரை 80-க்கும் மேற்பட்ட நூல்களையும் 20-க்தம் மேற்பட்ட கதை கவிதை, நாடக நூல்களையும் எழுதி வெளியிட்டிருக்கிறார். இவர் எழுதிய 'ஒலிம்பிக் பந்தயத்தின் கதை' எனும் நூல் 1977ம் ஆண்டும் விளையாட்டுக்களின் கதைகள் எனும் நூல் 1981ம் ஆண்டும் தேசிய விருதினைப் பெற்றிருக்கின்றன.

தமிழிலும், உடற்கல்வித் துறையிலும், முதுகலைப்பட்டம் (M. A , M. P. Ed ) பெற்றுள்ள ஆசிரியர் வானொலி, டெலிவிஷன், வாரப் பத்திரிக்கைகளில் தொடர்ந்து விளையாட்டுத் துறை பற்றி பேசியும் எழுதியுப் வருகிறார்

தமிழில் முதன் முறையாக ''விளையாட்டுக் களஞ்சியம்'' எனும் விளையாட்டுத் துறை மாத இதழை 1877 ஆம் ஆண்டிலிருந்து தொடர்ந்து நடத்தி பணியாற்றி வருகிறார்.

Grace Printers, West Mambalam, Madras-600 033.